# சின்டுவின் விருப்பம்

சரியான தேர்வு!
மைசூர் சாண்டல்
பேபி சோப் சந்தன,
பாதாம் எண்ணெய்களைக்
கொண்டது. அது
சருமத்திற்கு மிகவும்
ஏற்றது.








Almond oil moisturiser and antiseptic soap.



கடந்த 80 ஆண்டுகளாக
சந்தனத்தின் நற்குணத்தை
உங்கள் இல்லத்திற்குக்
கொண்டு வருகிறது
மைசூர் சாண்டல்
சோப் நிறுவனம்



HERO













# Heroes start early.

Ride, race, take a tumble or even take a fall.

Because it's never too early to be a hero.



# ஓர் இளைஞனின் விருப்பம்



''அம்மா! ஊரார் எல்லாம் என் தந்தையை உயர்வாக மதித்துப் பேசுகிறார்கள். 'பனிரெண்டு வருடங்கள் வீட்டைப் பற்றி நினைக்காமல் அவர் எவ்வளவு மேன்மையான நியாகத்தைச் செய்திருக்கிறார்' என்று கூறுகிறார்கள். அவர் எங்கே இருக்கிறார், அம்மா? எப்போது நம் வீட்டிற்கு வரப் போகிறார்?'' என்று ஓர் இளம் வயதினன் தன் தாயாரிடம் கேட்டான்.

''உன் தந்தை பல சிற்பிகளையும் கைதேர்ந்த வேலையாட்களையும் வைத்துக் கொண்டு வரலாற்றுப் புகழ்பெறப் போகிற ஒரு படைப்பை அளிக்கப் போகிறார். அந்த வேலையை முடிக்க எவ்வளவு காலம் பிடிக்கும் என்பது எனக்குத் தெரியாது,'' என்று அவனது தாயார் கூறினாள். அப்போது அந்த இளைஞன் தன் கண்களை மூடிக் கொண்டு அந்த மாபெரும் படைப்பு எவ்வாறு உருவாகிறது என்று கற்பனை செய்து பார்த்தான். ஆம், அந்த ஆலயத்தை நிர்மாணிக்க ஆயிரக்கானவர்கள் தன் தந்தையின் மேற்பார்வையில் வேலை நடப்பதை அவன் தன் மனக் கண்ணால் கண்டு களித்தான்.

அதன் பிறகு அவன் தன் தாயாரிடம், ''அம்மா! நான் அந்த ஆலயம் கட்டப்படும் இடத்திற்கு போய் என் தந்தையைச் சந்திக்கிறேன்,'' என்றான். அவளது தாயாரும் ''மன்னரின் கட்டளை வந்ததால் உன் தந்தை நீ பிறப்பதற்கு ஒரு மாதத்திற்கு முன்பே இந்த ஊரைவிட்டுப் போய்விட்டார். உன்னை அவர் பார்த்ததே இல்லை. அவரால் உன்னை அடையாளம் காண முடியாதே!'' என்றாள். இளைஞனோ ''எல்லாம் அவரால் முடியும். என்னைப் பார்த்து அவர் மகிழ்வார். நானும் அவரைக் கண்டு சந்தோஷப்படுவேன். எனக்குப் போக அனுமதி கொடு!'' என்று கெஞ்சினான். அவளும் தன் கணவருக்குப் பிடித்த, வீட்டில் வளர்ந்த மரத்தின் பழங்களை மகனிடம் அவற்றைக் கொடுத்து அனுப்பினாள்.



அந்த இளைஞனும் நடந்துகொண்டே போய் முடிவில் ஆலயம் கட்டப்படும் இடத்தை அடைந்தான். அவனது உற்சாகம் கரை புரண்டது. அங்கே போனதும் தன் தந்தையும் மற்ற வேலை யாட்களும் கோபுர நிர்மாணம் செய்ய முடியாமல் தவித்துக் கொண்டிருப்பதை அவன் கண்டான். அப்போது தன் வீட்டிலிருந்த ஒரு புத்தகத்தில் அந்த பிரச்சினை தீரக் கூறப்பட்டிருந்த வழி அவனது நினைவிற்கு வந்தது. அவன் அதை அவர்களிடம் கூறவே அந்த வேலை எளிதில் செய்து முடிக்கப்பட்டது.

### வினாக்கள்

1. அது எந்தக் கோயில்? அதிலுள்ள கடவுள் யார்?
   ..........................................................
2. அந்த இளைஞன், அவனது தந்தை, மன்னன் ஆகியோரின் பெயர்கள் என்ன?
   ..........................................................
3. ஆங்கிலேயர்கள் அக்கோயிலைக் குறிக்க என்ன பெயரைச் சொல்லி வந்தார்கள்?
   ..........................................................

இப்போட்டியில் 14 வயதிற்குட்பட்டவர்களே கலந்து கொள்ளலாம். உங்கள் விடைகளைத் தெளிவாகக் கோடிட்ட இடங்களில் எழுதி கூப்பனை நிரப்பி இந்த முகவரிக்கு அனுப்பவும்.

Orissa Tourism Quiz Contest
Chandamama India Limited,
No.82, Defence Officers' Colony,
Ekkatuthangal, Chennai - 600 097.

பெயர் : .................................................. வயது : ....................

முகவரி : .................................................. பின்கோடு : ....................



*One winner picked by Orissa Tourism in each contest will be eligible for 3 days, 2-night stay at any of the OTDC Panthanivas, upto a maximum of four members of a family. Only original forms will be entertained. The competition is not open to CIL and Orissa Tourism employees and their family members. Orissa Tourism, Paryatan Bhaven, Bhubaneswar-751 014. Ph:(0674) 432177, Fax:(0674) 430887, e-mail:ortour@sancharnet.in. Website:Orissa-tourism.com*



இந்தியப் புராதனக் கதைகள் 24



நவீன வேதாளக் கதை 19



மர்மக்குளம் 11



விநாயகர் 45

## பொருளடக்கம்






SUBSCRIPTION

For USA and Canada
Single copy $2
Annual subscription $20
*Remittances in favour of Chandamama India Ltd.*
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

பரிசளிப்புச் சந்தா
இந்தியாவைத் தவிர
மற்ற எல்லா நாடுகளுக்கும்
விமானத் தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ. 900
இந்தியாவிற்குள் ரூ. 120
புக்போஸ்டில்
உங்கள் சந்தாத் தொகையை
டி.டி வாயிலாகவோ
அல்லது மணியார்டரிலோ
சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற
பெயரை எழுதி அனுப்பவும்.

இப்பத்திரிகையில்
விளம்பரங்களை வெளியிடத்
தொடர்பு கொள்ள வேண்டிய
முகவரி:
சென்னை
Ph : 044 - 231 3637
234 7399
e-mail : advertisements@chandamama.org
டில்லி
மோனா பாட்டியா
Ph : 011 - 651 5111
656 5513 / 656 5516
மும்பை
ஷகீல் முல்லா
Mobile : 98203 - 02880
Ph : 022 - 266 1599
266 1946 / 265 3057

## இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள் - 15

நம் நாட்டின் சில முக்கிய இலக்கிய மேதைகளைப் பற்றிய வினாக்கள் இவை. இவற்றிற்கு விடைகள் உங்களுக்குத் தெரியுமா?

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு ஸ்சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***



1. 'வந்தே மாதரம்' என்ற கீதம் கொண்ட ஆனந்த மடம் என்ற நாவலை நான் எழுதினேன். நான் யார்?

---

2. ஹிந்தி இலக்கியத்தில் இயல்பானவற்றை எழுத ஆரம்பித்தவன் நானே. எனது நாவல்களான சேவா சதன், கோதான் என்பன என் சிறந்த படைப்புகளாகக் கருதப்படுகின்றன. நான் யார்?

---

3. நான் புகழ்பெற்ற தமிழ் எழுத்தாளன். 1975-ல் என் நாவல் 'சித்திரப் பாவை'க்கு ஞானபீட விருதைப் பெற்றேன். நான் யார்?

---

4. நான் மால்குடி என்ற கற்பனை ஊரை அளித்தவன். சுவாமியும் சிநேகிதர்களும், கைட், டார்க் ரூம் என்பன என் படைப்புகளில் சில. நான் யார்?

---

5. நான் ரிக் வேதத்தை மலையாள மொழியாக்கம் செய்துள்ளேன். நான் யார்?

---

ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த புராண மாவீரர் ........................................

........................................................................

........................................................................

போட்டியாளரின் பெயர்: ........................................

வயது: .................. வகுப்பு: ..............................

முகவரி: ..............................................................

........................................................................

பின்கோடு: ........................ போன்: ......................

போட்டியாளரின் கையொப்பம்: ..................................

பெற்றோரின் கையொப்பம்: ......................................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-15**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபென்ஸ் ஆஃபிசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி ஜனவரி 5, 2003

நிபந்தனைகள்:
1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்டவர்களுக்கு மட்டும்.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்றஅளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.

இப்பரிசுகளை உங்களுக்கு அளிப்பவர்கள்



நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# நம் உயர்வை அறிவோம்

நம் தேசத்தில் ஆதிசங்கரர், சுவாமி விவேகானந்தர், மகாத்மா காந்தி ஆகியோர் நாடு முழுவதும் சுற்றி வந்ததோடு நாட்டில் ஒவ்வொரு கட்டடமும் மரமும் கல்லும் நம் பெருமைமிக்க வரலாற்றை வெளிப்படுத்துவதை கண்டார்கள்.

பல நூற்றாண்டுகளுக்கு முன் ஆதிசங்கராச்சாரியாரும் அண்மைக் காலத்தில் சுவாமி விவேகானந்தரும் நம் நாட்டின் தென்குமரி முதல் இமயம் வரையுள்ள பகுதியில் நடந்தே சென்று தம் கொள்கைகளைப் பரப்பினார்கள். காந்திஜீ தேசியத்தையும் அகிம்சையையும் பரப்ப நாட்டின் மூலைமுடுக்குகளுக்கு எல்லாம் சென்றார். அவர் கூறியதைப் பாருங்கள். ''நான் இந்தியாவுடன் ஒன்றிப் போய்விட்டேன். அதனால் என் உடமைகளை எல்லாம் நாட்டிற்கே அர்ப்பணிக்கிறேன்.''

பள்ளிச் சிறுவர் சிறுமியர் சுற்றுலாப் பயணங்களை ஒரு குறிப் பிட்ட வட்டத்திற்குள் தான் மேற்கொள்கிறார்கள். புத்தகங்களைப் படித்தோ அல்லது தொலைக்காட்சியைப் பார்த்தோ தம் அறிவை வளர்க்க முயல்வதோடு நின்றுவிடாமல் அவர்கள் தம் நாட்டைப் பற்றி மேலும் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். பல இடங்களுக்குப் போய்ப் பார்க்க வேண்டும். இதுஅவர்களுக்குப் பரந்தநோக்கை அளிக்கும். நம்நாட்டு முதலாவது விண்வெளி வீரர் வெகுதொலைவில் இருந்து ''சாரே ஜஹாம்ஸே அச்சா ஹிந்துஸ்தாம் ஹமாரா'' என்றார். ஆம், உலகிலேயே நம் நாடு மிகச் சிறந்ததுதான்.

ஆசிரியர் : விஸ்வம்

*Editor :* VISWAM

Visit us at : http://www.chandamama.org



# நாகார்ஜுனா கொண்டா

பழங்கால வரலாற்றுப் பெருமையையும் தற்காலச் சிறப்பையும் கொண்ட ஓர் இடத்தை நீங்கள் காண விரும்பினால் ஆந்திரப் பிரதேசத்தில் உள்ள நாகார்ஜுன கொண்டாவிற்குச் செல்லலாம். இங்கு பழைய புத்த விஹாரத்தின் நினைவுச் சின்னங்களும், பல்கலைக் கழகமும் இருந்த இடங்கள் பார்ப்பவர்களைப் பரவசப்படுத்துகிறது.



முன்காலத்தில் இது விஜய புரி என அழைக்கப்பட்டது. இக்ஷ்வாகு வம்ச மன்னர்களின் ஆட்சி காலத்தில் நாகார்ஜுன கொண்டா தலைசிறந்து விளங்கியது. கி.பி.3வது நூற்றாண்டின் பௌத்த புராதனச் சின்னங்கள் இங்கு தோண்டி கண்டு எடுக்கப்பட்டன. ஆனால் கி.பி.4வது நூற்றாண்டில் இக்ஷ்வாகு வம்ச ஆட்சி வீழ்ச்சி அடைந்ததும் இதன் பெருமை மங்கிப் போயிற்று. இக்ஷ்வாகு வம்சத்தவர் நிர்மாணித்த கட்டடங்கள் 1926ல் புராதனச் சின்னங்களாக தோண்டி எடுக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளது.

இங்கு புத்த விஹாரம் ஒரு 'பிரமிட்' போலக் கட்டப்பட்டிருந்ததைக் காணலாம். இது ஐந்து அடுக்குகள் கொண்ட கட்டடம். இதில் 1500 அறைகள் உள்ளன. இங்கு காற்றோட்ட வசதியும் தண்ணீர் வசதியும் நன்கு திட்டமிட்டு செய்யப்பட்டுள்ளன. புகழ்பெற்ற பௌத்த பல்கலைக்கழகம் ஒன்றும் இங்கே இயங்கிக் கொண்டிருந்தது.

இங்கு காணக்கூடிய இன்னொரு இடம் தற்போது கட்டப்பட்ட நாகார்ஜுன அணை. இது நீர்மின் உற்பத்தித் திட்டங்களில் முதலிடம் பெற்று துவக்கப்பட்டது. உலகின் மிக உயரமான அணைகளில் ஒன்றாகக் கருதப்படும் இதன் உயரம் 124 மீ.

## இங்கு எப்படிச் செல்வது?

ஹைதராபாதிலிருந்து பஸ்களில் சென்றால் 150 கி.மீ. தொலைவில் உள்ளது. விஜயவாடாவிலிருந்தும் குண்டூரிலிருந்தும் பஸ்களில் பயணம் செய்து இதை அடையலாம்.



# மர்மக் குளம்

## 10

(அண்ணன் தம்பிகளான சர்ப்பநகனும் சர்ப்பஸ்வரனும் தம் விசித்திரக் குதிரைகளில் சவாரி செய்து குள்ளர்களின் குடியிருப்பிற்கு சென்றார்கள். அங்கு சர்ப்பநகன் கிருபாணஜித்தனின் கழுத்தில் சுருக்குக் கயிறைப் போட்டு இழுத்தான். மனிதக் குரங்கு சர்ப்பஸ்வரனைத் தாக்கி அவனைப் பிடித்து இழுத்துக் கொண்டு ஓடியது. இவ்விஷயத்தைக் கேள்விப்பட்ட ஜெயசீலனும் சித்தசாதகனும் குள்ளர்களின் குடியிருப்பை நோக்கிச் சென்றனர். அப்போது தம் எதிரே சர்ப்பநகன் தன் குதிரை மீது அமர்ந்து வருவதைக் கண்டார்கள். பிறகு -)

சர்ப்பநகன் தன் குதிரையை ஒரு மரத்தின் கீழ் நிறுத்தி, ''சர்ப்பஸ்வரா!'' என்று இரண்டு மூன்று முறை உரக்கக் கூவினான்.

அந்த அழைப்பிற்கு பதில் வராது போகவே, அவன் தன் இடைவாளை உருவி தன் எதிரிலிருந்த மரத்தைக் கோபத்தோடு குத்தி ''அந்த மனிதக் குரங்கு மட்டும் என் தம்பியைக் கொன்றிருந்தால், நான் அதையும் அதை ஆட்டி வைப்பவனையும் துண்டம்துண்டமாக வெட்டி எறிவேன். இது சத்தியம்,'' என்று ஆவேசத்துடன் கூறினான்.

புதரில் மறைந்திருந்த ஜெயசீலன் அதைக் கேட்டுத் தனக்குள் சிரித்துக் கொண்டான். அவன் சித்தசாதகனிடம் ''கேட்டாயா அந்தப் பயல் செய்த சத்தியத்தை!'' என்று வினவ, சாதகனும் ''அவன் தன் தம்பியைக்



காணவில்லையே என்ற ஆத்திரத்தில் ஏதோ உளறுகிறான். ஆனால் நாம் இவனை எப்படிப் பிடிக்கப் போகி றோம்?'' என்று கேட்டான்.

ஜெயசீலனும் சற்று யோசித்து விட்டு ''சாதகா! உன் தோற்றமும் பேச்சும் ஒரு சர்வ சாதாரண மனிதனது போல இல்லை. எனவே நீ எவ் விதத்திலாவது அவனை அணுகி அவ னது வாளை வாங்கிவிட வேண்டும். அதன் பிறகு அவனை நான் பிடித்து மாயக் குளத்தைப் போய் அடையும் வழியை அவனிடம் கேட்டுத் தெரிந்து கொள்கிறேன்,'' என்றான்.

சித்தசாதகனும் உடனே சர்ப்ப நகனை நோக்கிச் சென்றான். ஜெய சீலன் குள்ளர் படைத் தலைவனிடம், ''படைத் தலைவா! இந்த விசித்திர மனிதனின் சக்தி எப்படிப்பட்டது என்று நமக்குத் தெரியாது. நீ சித்த சாதகனுக்கு உதவுவதற்காக ஏதாவது ஒரு புதரில் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும்,'' என்றான். அப்படைத் தலைவனும் அவ்வாறே செய்வதாகக் கூறித் தன் வாகனத்தை ஓரிடத்தில் கட்டிவிட்டு சித்தசாதகன் சென்ற திக்கில் சென்றான்.

சித்தசாதகன் தன் ஈட்டியைக் கையில் வைத்துக் கொண்டு சர்ப்ப நகனை அணுகினான். அவனைக் கண்டு கோபத்தோடு ''யாரடா நீ என் பகுதிக்குள் நுழைந்து ஏதேதோ பிதற்றுகிறாய்? உன் கூச்சல் என் தூக் கத்தைக் கெடுத்து கோபத்தைக் கிளறி விட்டுவிட்டது,'' என்று கேட்டான். அதைக் கேட்ட சர்ப்பநகன் சற்றும் பயப்படாமல் தன் வாளை எடுத்து சித்தசாதகனுக்கு நேராக நீட்டினான்.

சித்தசாதகன் அவனை உற்றுப் பார்த்து, ''அடே! உன்னைப் பார்த் தால் மர்மக் குளத்து ஆள் போலத் தெரிகிறதே!'' என்றான். அதைக் கேட்டு சர்ப்பநகன் திகைத்து 'அடே யப்பா! என்னைப் பார்த்ததுமே நான் இன்ன இடத்தைச் சேர்ந்தவன் என்று கூறிவிட்டானே! இவன் ஒரு மந்திர வாதியாக இருக்க வேண்டும்' என்று எண்ணி பயந்து நடுங்கினான்.

அப்போது சித்தசாதகன் அதட்டும் குரலில் ''அடே! மர்மக்குள மகேஸ் வரதாசன் என்று கர்வம் கொண்டா என்னைப் பார்த்தும் குதிரை மீது உட்கார்ந்திருக்கிறாய்? முதலில் குதி ரையிலிருந்து கீழே இறங்குடா!'' என்று உரக்கக் கூவினான்.

சர்ப்பநகன் பயந்தவாறே தன்

விசித்திர குதிரை மீதிருந்து கீழே குதித்தான். உடனே சித்தசாதகன் ''நீ வாளை உருவிக் கொண்டு வீர சபதம் புரிந்தாயே! எங்கே அந்த வாளைக் கொடு,'' என மிரட்டினான்.

சர்ப்பநகனுக்கு ஏதோ சந்தேகம் ஏற்படவே, சாதகனைப் பார்த்து ''ஏதோ மர்மக்குளம் மகேஸ்வரர் என்றெல்லாம் சொன்னாயே! அது பற்றி உனக்கு என்ன தெரியும்?'' என்று தயங்கியவாறே கேட்டான். அதைக் கேட்ட சித்தசாதகன் பலமாகச் சிரித்து ''அடே சர்ப்பநகா! உன் நண்பனான மகரகேதுவைக் கூட எனக்குத் தெரியும். உன் வாள் உன் கையில் இருப்பதால் உனக்கே தான் ஆபத்து,'' என்றான்.

அப்போது சர்ப்பநகன் பற்களை 'நறநற'வென்று கடித்தவாறே ''ஓ! இப்போது நீ யாரென்பது எனக்குத் தெரிந்துவிட்டது. மனிதக் குரங்கை ஆட்டி வைக்கும் அந்த கிருபாண ஜித்தன் உன்னையும் உன் நண்பனையும் பார்த்திருக்கிறான். நீ காளியை வழிபடுபவன் தானே?'' என்று கேட்டான்.

சித்தசாதகன் ஈட்டியை நிலத்தில் குத்தி ''ஏய்! நான் சாதாரண காளியை வழிபடுபவன் அல்ல. காபாலிகன் என்ற சக்தி வாய்ந்த மந்திரதந்திரங்கள் அறிந்தவன் என்பதைத் தெரிந்து கொள்,'' என்றான் கண்களை உருட்டியவாறே.

சர்ப்பநகனும் ''ஒரு காபாலிகனின் சக்தி எப்படிப்பட்டது என்று எனக்கு நன்கு தெரியும். என்னைப் பிடித்துக் கொண்டுபோய் காளிக்கா பலியிடப் போகிறாய்?'' என்று கூறி அவனை வாளால் தாக்க முயன்றான்.

ஆனால் அவனது முயற்சி பலிக்க





பார்க்கலாம்,'' என்றான். ஜெய சீலனோ ஏளனமாகச் சிரித்தவாறே ''சாதகா! இந்த மாவீரன் ஏதோ சண்டை போடச் சொல்கிறான். நீ இவனிடம் உன் கைவரிசையைக் காட்டுகிறாயா?'' என்றான்.

சர்ப்பநகன் சற்றும் தாமதிக்காமல் சித்தசாதகன் மீது பாய்ந்தான். சித்த சாதகனோ அவனது இடுப்பைப் பற்றி அவனை உயரத் தூக்கி ஒரு சுற்று சுற்றி எறிந்தான். கீழே விழுந்த சர்ப்பநகன் எழுந்து நின்று நடுநடுங்கியவாறே ''ஐயா! என்னைக் கொன்றுவிடா தீர்கள். நானும் என் தம்பியும் மகர கேது என்பவனைத் தேடிக் கொண்டு இப்பகுதிக்கு வந்தோம். என் தம்பி சர்ப்பஸ்வரனை ஒரு மனிதக் குரங்கு பிடித்து இழுத்துக் கொண்டு போய் விட்டது. அவனைத் தேடிக் கண்டு பிடித்து அழைத்துக் கொண்டு இந்தக் காட்டிலிருந்து போய்விடுகிறேன்,'' என்றான்.

அப்போது ஜெயசீலன் ''இதுவா சங்கதி? சரி, உன் தம்பியைத் தேடும் முயற்சியில் நாங்களும் சேர்ந்து கொள்கிறோம். ஆனால் அதற்குமுன் நீ எங்களை மர்மக் குளம் இருக்கும் இடத்திற்கு அழைத்துச் செல்வதாக சத்தியம் செய்து கொடுக்க வேண் டும்,'' என்றான்.

அதைக் கேட்ட சர்ப்பநகன் திகைத்து ''ஐயோ! அப்படி நான் மட் டும் செய்தால் என் தலை வெடித்து விடுமே!'' என்று அழாத குறையாகக் கூறினான். ஜெயசீலனும் ''ஏன் வெடிக்கும்? அப்படி ஏதாவது சாபம்

வில்லை. ஏனெனில் சித்தசாதகனின் பாதுகாப்பிற்கு வந்த படைத் தலை வன் தன் கடாவை சர்ப்பநகன் மீது மோதும்படி செய்தான். சர்ப்பநகன் தடாலென்று தரை மீது விழுந்தான். அவனது கையிலிருந்த வாள் சற்று தூரத்தில் விழவே, சித்தசாதகன் அதன் மீது தன் காலை அழுத்தி வைத்து நின்றான்.

இச்சமயத்தில் ஜெயசீலன் அங்கு வந்து கீழே கிடந்த சர்ப்பநகனைத் தூக்கி நிறுத்தியவாறே சித்தசாதனிட மிருந்து அந்த வாளை எடுத்துக் கொண்டு ''சர்ப்பநகா! உன் பல்லைப் பிடுங்கிவிட்டேன். உன்னால் இனி எதுவும் வாலாட்ட முடியாது,'' என்றான்.

சர்ப்பநகனோ ''இந்த நிலையில் பேசும் நீ ஒரு வீரன் தானா? என்னோடு நேருக்குநேர் நின்று சண்டை போடு

இருக்கிறதா?'' என்று கேட்டான். சர்ப்பநகனும் ஆமெனத் தலையை ஆட்டவே, ஜெயசீலன் சிரித்தவாறே ''உன் தலை வெடிப்பதற்கு நீ அங்கே போக வேண்டாம். நானே இப்போதே உன் தலையை வெடிக்கும்படிச் செய்கிறேன்,'' என்று கூறி வாளை உயர்த்தினான்.

அச்சமயத்தில் யாரோ பலமாகக் கூக்குரலிடவே, ஜெயசீலன் சத்தம் வந்த திசையைப் பார்த்தான். கிருபாணஜித்தன் ஒரு விசித்திரக் குதிரை மீது அமர்ந்து வந்து கொண்டிருந்தான். அவன் ''அந்த ஜெயசீலன் எங்கே? சித்தசாதகன் எங்கே இருக்கிறான்? இருவரையும் என் வாளுக்கு இரையாக்குகிறேன்,'' என்று உறுமினான். கிருபாணஜித்தனைப் பார்த்ததுமே சித்தசாதகன் தன் ஈட்டியை உயர்த்தி ''வா,வா! வசமாக மாட்டிக் கொண்டாயா?'' என்று கறுவினான்.

அப்போது சர்ப்பநகன் அவனைத் தடுத்து ''ஐயா! இவனை இப்போது கொன்றுவிடாதீர்கள். இந்தக் குதிரை என் தம்பியினுடையது. அவனும் அவனை இழுத்துச் சென்ற மனிதக் குரங்கும் என்னவாயிற்று என்று இவனிடம் விசாரித்துத் தெரிந்து கொள்ள வேண்டும்,'' என்றான்.

அப்போது ஜெயசீலன் ''நீயே அவனை விசாரி. இந்தா உன் வாள். நாங்கள் சற்றுத் தள்ளி இருக்கிறோம்,'' எனக் கூறி சர்ப்பநகனிடம் அவனது வாளைக் கொடுத்தான்.

அங்கு வந்த கிருபாணஜித்தன் சர்ப்பநகனைப் பார்த்துவிட்டு



''எங்கே அவர்கள் இருவரும்? நீ யார்? நீதானே என் கழுத்தில் சுருக்குக் கயிறை மாட்டி இழுத்தவன்?'' என்று கேட்டான்.

சர்ப்பநகனும் ''ஆமாம். அப்படிச் செய்தவன் நான்தான். நீ இப்போது அமர்ந்திருப்பது என் தம்பியின் குதிரை மீது. அவனை என்ன செய்தாய்?'' எனக் கூறி தன் குதிரை மீதேறி அவனை அணுகினான். கிருபாணஜித்தனோ ''நில். அங்கேயே உன் தம்பியை மனிதக் குரங்கு இழுத்துக் கொண்டு போய்விட்டது. இந்தக் குதிரை திரிந்து கொண்டிருந்ததால் இதைப் பிடித்து இதன் மீது ஏறி இங்கு வந்தேன்,'' என்றான்.

சர்ப்பநகனோ ''என் கேள்விக்குப் பதில் சொல். எங்கே என் தம்பி?'' என்று கோபத்தோடு கேட்டான். கிருபாணஜித்தனோ ''எனக்குத் தெரி



யாது. ஒருவேளை மனிதக் குரங்கு அவனைக் கொன்றிருக்கலாம். நான் என் எதிரிகளைத் தேடிக் கொண்டிருக்கிறேன். சற்றுமுன் அவர்கள் இங்கே இருந்தார்களே. எங்கே போனார்கள்? அவர்கள் உன் நண்பனான மகரகேதுவின் விரோதிகள்,'' என்றான். அதைக் கேட்டு சர்ப்பநகன் பலமாகச் சிரித்து ''அடே! இந்தப் பசப்பு வார்த்தைகள் வேண்டாம். சொல், என் தம்பி எங்கே?'' என்று அதட்டிக் கேட்டான்.

கிருபாணஜித்தனும் ''கோபப் படாதே! உன் தம்பிக்கு எதுவும் நேர்ந்திராது. என் பின்னாலேயே வா!'' எனக் கூறித் தன் குதிரையைச் செலுத்தினான். சர்ப்பநகனும் அவன் பின்னாலேயே தன் குதிரையை ஓட்டிச் சென்றான்.

அதைக் கண்ட சாதகன் ஜெயசீலனிடம் ''அந்த இருவரும் நமக்குக் கிடைக்காமல் நழுவிவிட்டார்களே!'' என்றான் உற்சாகம் இழந்தவனாய். குள்ளர் படைத் தலைவன் நடந்ததை எல்லாம் பார்த்து மலைத்து நின்றான்.

பிறகு அவன் ஜெயசீலனிடம் ''அந்த இருவரையும் நாம் பிடிக்க வேண்டும்,'' எனவே ஜெயசீலனும் ''நீ உன் ஆட்களுக்கு ஏதாவது சமிக்ஞை செய். அவர்கள் வழி மறித்து இந்த இருவரையும் பிடிக்கட்டும்,'' என்றான்.

உடனே அப்படைத் தலைவன் அதற்கான ஏற்பாடுகளை செய்வதாகக் கூறிவிட்டுச் சென்றான். ஜெயசீலனும் சித்தசாதகனும் அங்கிருந்து கொஞ்ச தூரம் போய் நின்றார்கள். அப்போது ஜெயசீலன் சித்தசாதகனிடம் ''நமக்குப் பல இடையூறுகள் ஏற்பட்டு வருகின்றன. அதனால் நாம் மனம் தளர்ந்துவிடக் கூடாது,'' என்றான்.

கிருபாணஜித்தனைப் பின் தொடர்ந்து சென்ற சர்ப்பநகன் ''நில்! ஒருவேளை என் தம்பி உயிருடன் இருக்கலாம். அதனால் நீ என் தம்பியின் குதிரையை என்னிடம் கொடுத்துவிட்டு உன் வழியே செல்!'' என்றான்.

அப்போது கிருபாணஜித்தன் ''நீ சமாதானம் பேசுவது போலப் பேசி நயவஞ்சகமாகக் கொல்லமாட்டாயே? என் முதல் எதிரி அந்த ஜெயசீலன்தான். அவனை ஒழித்துவிட்டுத் தான் மறுவேலை. அதன் பிறகே உன் விஷயத்திற்கு வருவேன்,'' என்று கூறி குதிரையை

மேலும் வேகமாக ஓட்டினான். சர்ப்ப நகனும் அவனை விடாமல் துரத்திக் கொண்டே சென்றான்.

இதற்குள் குள்ளர் படைத் தலைவன் தப்பட்டைகளால் அறிவித்த சமிக்ஞை அப்பகுதியில் வாழ்பவர்களை எச்சரிக்கவே, அவர்கள் அங்கங்கே கூடிவிட்டார்கள். அவர்கள் கிருபாணஜித்தனையும் சர்ப்ப நகனையும் வழி மறித்தார்கள். கிருபாணஜித்தன் முன்னே செல்ல முடியாமலும் பின்வாங்க முடியாமலும் திணறினான். முன்னே சென்றால் மக்கள் கூட்டம். பின்வாங்கினாலோ சர்ப்பநகன்.

ஆற்றின் கரை யோரமாகச் சென்று கொண்டிருந்த அவனுக்கு ஒரு வழி சட்டென்று தெரிந்தது. அவன் தன் குதிரையோடு ஆற்றில் பாய்ந்துவிடத் தீர்மானித்து ஆற்றைப் பார்த்தான். அங்கு இரு பயங்கர முதலைகள் இருப்பதைக் கண்டு என்ன செய்வது என்று யோசித்தான்.

எங்கு திரும்பினாலும் மரணமே என்பதால் ஆற்றில் குதித்து உயிரைப் போக்கிக் கொள்வதை அவன் தேர்ந்தெடுத்தான். சற்றும் தயங்காமல் அவன் குதிரையை ஆற்றில் போக விட்டு அவனும் ஆற்றில் குதித்து விட்டான்.

அதைக் கண்ட சர்ப்பநகன் "கிருபாணஜித்தா! ஏன் இப்படிச் செய்தாய்? முதலைகள் உன்னோடு சேர்ந்து என் தம்பியின் குதிரையையும் அல்லவா விழுங்கிவிடும். அதனால் உன்னையும் என் தம்பியின் குதிரையையும் காப்பாற்ற நானும் ஆற்றில் குதிக்கிறேன். அவன் உயிருடன் இருந்தால் அவனுக்கு இந்தக் குதிரை மிகமிக அவசியம்," எனக் கூறி



அவனும் தன் குதிரையோடு ஆற்றில் குதித்தான்.

முதலைகள் இரண்டும் முதலில் குதித்த கிருபாணஜித்தனை விழுங்க வந்தன. பின்னால் குதித்த சர்ப்பநகன் முதலையைத் தாக்கத் தன் வாளை உயர்த்தினான். கரையில் நின்ற குள்ளர்கள் முதலைகளின் மீது கற்களை வீசி எறிந்தனர்.

கற்கள் குளத்திலிருந்த முதலைகளின் மீதும் வேறு இடங்களிலும் விழுந்தன. தன் மீது அவை பட்டு விடுமோ என்று பயந்து சர்ப்பநகன் அங்கும் இங்கும் நகர்ந்தவாறே, ''என் மீது கல்லை எறிந்துவிடாதீர்கள். நான் அந்தக் கிருபாணஜித்தனைப் பிடிக்கவே முயன்று கொண்டிருக்கிறேன்,'' எனக் கூறி கிருபாணஜித்தனின் காலைப் பற்றிய முதலையைத் தன் வாளால் குத்தினான். முதலை துள்ளிப் புரண்டது.

முதலாவது முதலையிலிருந்து விடுபட்ட கிருபாணஜித்தன் இரண்டாவது முதலையிடம் அகப்பட இருந்தான். ஆனால் அதற்குள் அவனது குதிரை கரையை நோக்கி ஓட அதைப் பிடித்த கிருபாணஜித்தனும் கரையை அடைந்தான். குதிரை கிருபாணஜித்தனோடு கரையில் ஓடி மனிதனைப் பிடித்துக் கொல்லும் மரண மரத்தை அடைந்தது.

கரையில் நின்றவர்களோ, ''கிருபாணஜித்தா! ஜாக்கிரதை! அது ஆபத்தான மரம். உன்னைப் பிடித்து நசுக்கி நொறுக்கிக் கொன்றுவிடும். தப்பி வேறு எங்காவது ஓடு!'' என்று கத்தினார்கள்.

கிருபாணஜித்தனும் அதைக் கேட்டு ''என்ன? மரண மரமா அது? அப்படியானால் நான் எச்சரிக்கையுடன் இருக்கிறேன். நான் அந்த மரத்திடம் சிக்கிக் கொள்ளமாட்டேன்,'' என்று கூறிக் குதிரையை அடக்க முயன்றான்.

ஆனால் கிருபாணஜித்தனை அக்குதிரை அந்த பயங்கர மரத்தடியே கொண்டு போயிற்று. அந்த மரத்தின் கிளை ஒன்று கிருபாணஜித்தனைப் பற்றி உயரத் தூக்கலாயிற்று.

*(தொடரும்)*



நவீன வேதாளக் கதை

# மணப்பெண்ணின் மனம்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான்.

அதன்பின் அவன் கீழே இறங்கி அந்த உடலை எடுத்துச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் ஏன் இப்படி விடாமல் முயற்சி செய்கிறாய்? நீ நினைப்பது எல்லாம் நடந்துவிடாது. இதை விளக்க உனக்கு இந்து வர்மன் என்னும் மன்னனைப் பற்றிக் கூறுகிறேன். கவனமாகக் கேள்,'' என்று சொல்லிக்



ஒரு வீரனிடம் கேட்கவே, ''இவர்கள் தம்மை லட்சுமண வம்சத்தவர்கள் என்று கூறிக் கொள்கிறார்கள். இவர் களில் பலர் நன்கு படித்தவர்கள் நல்ல பண்பாடும் கொண்டவர்கள். முன்பு ராமபிரான் சீதாதேவியைத் தேடிக் கொண்டு இந்தக் காட்டின் வழியாகத் தான் சென்றாராம். அப்போது இங் குள்ள மலைவாசிகள் ராமரை நன்கு உபசரித்து அவரது தம்பி லட்சு மணனைப் போலவே நடந்து கொண்டார்களாம். அதனால் தான் இவர்கள் லட்சுமண வம்சத்தவர் என்ற பெயரை அடைந்தார்களாம். இவர்களது பெண்கள் கூட ஆயுதங் களைப் பயன்படுத்துவதில் கை தேர்ந்தவர்கள். காட்டில் எந்த பயங்கர மிருகம் வந்து தாக்கினாலும் அதை எதிர்த்துத் தாக்கி எளிதில் அவர்கள் கொன்றுவிடுவார்கள்,'' என்று அவன் விவரமாகக் கூறினான்.

கதை சொல்ல ஆரம்பித்தது.

வெகுகாலத்திற்குமுன் விந்திய மலைப் பகுதியில் இந்துபுரி என்ற சிறிய நாட்டின் மன்னனாக இளை ஞன் இந்துவர்மன் ஆனான். அவனது தந்தை திடீரென இறந்து போனதால் அந்த இளைஞனுக்கு ஆட்சிப் பொறுப்பை மேற்கொள்ள வேண் டியதாயிற்று. அவன் அச்சிறுவயதி லும் ஆட்சியைத் திறம்பட புரிந்து வந்தான்.

அவனுக்கு வேட்டையாடுவதில் விருப்பம் அதிகம். எனவே தன் நாட்டின் மேற்குப் பகுதியில் உள்ள அடர்ந்த காட்டில் வேட்டையாட ஒரு சில வீரர்களைக் கூட்டிக் கொண்டு சென்றான். அக்காட்டில் பல மிருகங் களை மட்டும் பார்க்கவில்லை. பல மலைவாசிகளையும் கண்டான். அவர்களைப் பற்றிய விவரங்களை

இந்துவர்மன் அந்த வீரன் கூறி யதை ஆவலுடன் கேட்டுக் கொண் டான். அப்போது அவன் பார்வையில் அழகிய மான் ஒன்று படவே, அவன் தன் வில், அம்புகளை எடுத்துக் கொண்டு அதைப் பிடிக்க முதலில் முயன்றான். அது வேகமாக ஓடவே அவன் அதைத் துரத்தினான். முடி வில் அதன் மீது ஓர் அம்பை எய்தான். ஆனால் அது அதன் மீது படவில்லை. அதே சமயம்ட வேறொரு பக்கத்தில் யாரோ எய்த அம்பு அதைத் தாக்கவே மான் துடிதுடித்தவாறே விழுந்தது.

அதைக் கண்ட இந்துவர்மன் ஆச் சரியப்பட்டு அசையாமல் நின்றான்.

அப்போது ஒரு கருப்புக் குதிரை மீது சவாரி செய்து கொண்டு வந்த லட்சுமண் வம்சப் பெண் ஒருத்தி கீழே விழுந்து கிடந்த மானை அணுகினாள். அந்த இளம்பெண்ணைக் கண்டு இந்துவர்மன் மேலும் திகைத்தே போனான். அவள் மலைச் சாதிப் பெண்களைப் போல உடை அணிந்து ஆபரணங்களைப் போட்டுக் கொண்டிருந்தாலும் அவளுடைய அழகு நன்கு வெளிப்பட்டுக் கொண்டுதான் இருந்தது.

மானின் பக்கம் தன் குதிரையை நிறுத்திக் கீழே இறங்கிய அவள் சற்று தூரத்தில் இருந்த இந்துவர்மனைக் கண்டு ஆச்சரியப்பட்டாலும் அவனுக்குப் பணிவுடன் வணக்கம் செலுத்தினாள். அதன்பின் நடந்த பேச்சுவார்த்தையில் அவள் மலைச் சாதியினரின் தலைவனின் மகளான சம்பகம் என்று இந்துவர்மன் தெரிந்து கொண்டான். அவளும் அவனைத் தன் இருப்பிடத்திற்கு அழைத்துக் கொண்டு சென்றாள்.

இந்துவர்மனின் வருகையால் பூரித்துப் போன சம்பகத்தின் தந்தை ''அரசே! நீங்கள் இரண்டு நாட்களாவது இங்கே தங்கி எங்களை கௌரவிக்க வேண்டும்,'' என்று வேண்டிக் கொண்டான். இந்துவர்மன் அதற்கு இணங்கி அங்கே இருந்தான்.

அந்த இரண்டு நாட்களில் சம்பகத்தின் இனிய கானமும், பண்பான உபசரிப்புகளும் அவனை அவளிடம் மிகவும் ஈர்த்தன. அவனும் அவளிடத்தில் ''நான் உன்னை மணக்க விரும்புகிறேன்,'' எனக் கூறித் தன் மனதில் உள்ள ஆசையை வெளிப்படுத்தினான்.

அவள் தலை குனிந்தவாறே,





''அரசே! நான் மனதில் எண்ணியதையே நீங்கள் கூறிவிட்டீர்கள். அது என் பாக்கியமே! ஆனால் எங்கள் வம்ச ஆசாரப்படி மலைச் சாதிப் பெண்ணை ஒருவருக்கு மேற்பட்டு இருவரோ அல்லது பலரோ மணக்க விரும்பினர் என்றால் அவர்களுக்குப் போட்டி வைக்கப்படும். அதில் வெற்றி பெறுபவர் அவளை மணக்கலாம். என் அத்தை மகன் என்னை மணக்க விரும்புகிறான். என் கூட்டத்தவரும் அவனே என்னை மணக்க வேண்டும் என விரும்புகிறார்கள். எனக்கோ அவனை மணக்க விருப்பம் இல்லை. எனவே இதற்குப் போட்டி நடக்கும். போட்டி என்ன வென்றால் எங்கள் ராமர் கோயிலில் உள்ள பழைய வில்லை எடுத்து நாண் ஏற்ற வேண்டும். என் அத்தை மகனின் உடலில் பலம் இல்லை. அவன் கைகள் சூம்பி உள்ளன. இத்தகையவனுடன் தான் நீங்கள் போட்டி போடப் போகிறீர்கள்,'' என்றாள்.

இந்துவர்மனும் ''சரி, போட்டி போட்டுத் தான் பார்க்கலாமே!'' என்றான். மறுநாள் போட்டி. அதற்கு வந்த சம்பகத்தின் அத்தை மகனிடம் இந்துவர்மன், ''நீ போட்டியில் வென்றாலும் கூட நீ சுகமாக அவளுடன் வாழ்க்கை நடத்த முடியுமா? அவள் மனதை அறிந் தாயா? நீயே பார்!'' என்றான்.

அவனும் சம்பகத்தைப் பார்த்தான். அவளது முகம் வாடி இருந்தது. கண்களில் கண்ணீர் நிறைந்து வழிந்து கொண்டிருந்தது. அதைக் கண்டு அவன் இந்துவர்மனிடம் ''அரசே! நான் போட்டியிலிருந்து விலகி விடுகிறேன். சம்பகம் தங்களை மணந்து ராணியாகட்டும்,'' எனக் கூறி வணங்கி நின்றான்.

இந்துவர்மன் சம்பகத்தின் தந்தையிடம், ''இனிமேல் இந்த மாதிரிப் பழங்காலப் போட்டிகளை வைக்காதீர்கள். பெண்ணின் மனதில் என்ன உள்ளது என்பதை அறிந்து செயல் படுங்கள்,'' எனக் கூறி போட்டிக்கு வைக்கப்பட்டிருந்த வில்லைத் தூக்கி எறிந்தான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி, ''மன்னனே! இந்துவர்மன் சம்பகத்தின் அத்தை மகனிடம் பேசி போட்டியிலிருந்து விலகச் செய்ததும், பழங் கால வில்லைத் தூக்கி எறிந்ததும் சரியான செயலா? மன்னன் என்ற

அகம்பாவத்தால்தான் இப்படிச் செய்தானா? அந்த மலைவாசிகள் வம்சபரம்பரையாகக்கடைப்பிடித்து வரும் பழக்கம்தான் அந்தப் போட்டி என்பதை இந்துவர்மன் அறிந்து தானே இருந்தான்? அவன் போட்டி யில் கலந்து கொண்டு சம்பகத்தின் அத்தை மகனிடம் பேசி அவனது மனதை மாற்றி அப்போட்டியி லிருந்து விலகச் செய்தான். இது எந்த வகையில் நியாயம்? மேலும் காலம்காலமாக மலைவாசிகள் பெரிதும் மதித்துவரும் போட்டிக் கான வில்லை இந்துவர்மன் தூக்கி எறிந்தது பண்பற்ற செயல்தானே? இந்தக் கேள்விகளுக்குச் சரியான விடைகள் தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்குநூறாகிவிடும்,'' என்றது.

விக்கிரமனும் ''இந்துவர்மன் கூறியதும் செய்ததும் சரியே. திரு மணத்தை மணமக்களின் அபிப் பிராயத்தை அறிந்து கொண்டு செய்து வைத்தாலே அவர்களது வாழ்க்கை இன்பகரமாக இருக்கும். போட்டி வைத்து மணமகளை மணமகனுக் குத் திருமணம் செய்து வைத்தால் அது வெறும் சடங்காகத் தான் இருக்கும். போட்டி போன்றவற்றை வைப்பது பழங்காலத்து வழக்கமே. ஆனால் பழையன கழிதலும் புதியன புகுதலும் மனித வாழ்க்கையில் நடந்து கொண்டே இருக்கிறது. மலைவாசிகளுக்கு அதை உணர்த்தி காலத்திற்கு ஏற்ப மாறுதல்கள் செய்து கொள்ள வேண்டும் என்பதைக் கூறத்தான் அவன் வில்லைத் தூக்கி எறிந்தான். இந்துவர்மன் சம்பகத் தின் அத்தை மகனுக்கு மணமக ளின் மனநிலையை விளக்கியதால் அவன் போட்டியிலிருந்து கண்ணிய மாக விலகிக் கொண்டான். எனவே இந்துவர்மன் செய்தது சரியே!'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலை யவே, வேதாளம் அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# தந்தையை விடுவித்த தனயன்



கோஹோர் நன்கு படித்த முனிவர். அவர் தினமும் அதிகாலையில் ஆற்றில் குளித்துவிட்டு வந்து வேதங்களை உச்சரிப்பதை வழக்கமாகக் கொண்டவர். அவர் வேத மந்திரங்கள் கூறுவதை அவ்வழியே செல்பவர்கள் கேட்டு மகிழ்ந்து வந்தார்கள். இவ்வாறு மந்திரங்களைக் கேட்பவர்களில் அவரது மனைவி சுமதியும் ஆவாள். அவள் அம்முனிவரின் குருவான உத்தாலகரின் மகள்.

ஒருநாள் அம்முனிவர் மந்திரங்களைக் கூறிக் கொண்டிருந்தபோது 'ஆகா!' என்ற மெல்லிய குரல் ஒலிப்பது கேட்டு அவர் வியப்படைந்தார். அவ்வாறு கூறியது யார் என்று சுற்றிலும் பார்த்தார். யாருமே இருக்கவில்லை. யாரோ வழிப்போக்கன் அவ்வாறு கூறினான் என்று அவர் எண்ணிக் கொண்டார். ஆனால் இரண்டு மூன்று முறை 'ஆகா!' என குரல் ஒலிப்பது கேட்டு அவர் ஆச்சரியப்பட்டார். நான்காவது முறையில் அந்தக் குரல் தவறாக மந்திரத்தைக் கூறுவதாகச் சொல்லி சரியானது இது எனச் சொல்லித் திருத்தியது.

முனிவர் யார் அவ்வாறு கூறியது என்று சுற்றிலும் பார்க்க அங்கு யாரும் இல்லை. அவர், ''இப்போது பேசியது யார்? உங்கள் பெயரைச் சொல்லுங்கள். நீங்கள் எங்கே இருக்கிறீர்கள்?'' என்று உரத்த குரலில் கேட்டார். பதில் வராததால் இன்னும் நான்கைந்து முறை கேட்டார். அப்போதும் ஒரு பதிலும் கிடைக்கவில்லை. அவர் கோபத்தோடு ''நான்

- பாரதீயன் -

கேட்டால் பதில் சொல்லாத நீ ஏன் ஒளிந்திருக்கிறாய்? நீ தேவனாக இருந்தாலும் சரி, வேறு யாராக இருந்தாலும் சரி, நான் பல முறை கேட்டும் நீ பதில் கூறாததால் உன்னை சபிக்கிறேன். உன் உடலில் எட்டு கோணல்கள் ஏற்பட்டு நீ விகாரமாக இருப்பாய்,'' என்று சாபம் கொடுத்துவிட்டார்.

அதன் பிறகு சில பொருள்களும் பணமும் தேவைப்பட்டதால் அவர் ஜனக மன்னரைக் காணச் சென்றார். அப்போது அரசபையில் வந்தி என்ற மகா பண்டிதர் மற்ற பண்டிதர்களைத் தம்மோடு வாதம் புரிய அழைத்தார். வாதத்தில் அப்பண்டிதர் ஜெயித்தால் லட்சம் வராகன்கள் கொடுக்கப்படும். மாறாக, தோற்றுப் போனால் அவர் ஆயுட்காலம் முழுவதும் சிறையில் இருக்க வேண்டும்.

கோஹோர் வந்தியுடன் வாதம் புரிய தீர்மானித்துக் கொண்டார். அவருக்குத் தான் கற்ற சாஸ்திரங் களில் முழு நம்பிக்கை இருந்தது. அதனால் அவர் வந்தியுடன் வாதம் புரியலானார். ஆனால் வாதத்தில் வந்தி வென்றதால் கோஹோர் சிறை யில் அடைக்கப்பட்டார்.

முனிவர் ஜனகரைப் பார்க்கச் சென்றபின் அவரது மனைவி சுமதி ஓர் ஆண் குழந்தையைப் பெற்றாள். அந்த குழந்தையின் உடலில் எட்டு கோணல்கள் இருந்ததால் அஷ்ட வக்கிரன் என்று அழைக்கப்பட்டான். அக்குழந்தை வேதங்களை நன்கு அறிந்திருந்தது. எப்படி என்றால் அது தன் தாயின் கர்ப்பத்தில் இருந்த போதே தன் தந்தை தினமும் வேத மந்திரங்கள் சொல்வதைக் கேட்டு அவற்றை மனனம் செய்து வந்தது.



அதுதான் தன் தந்தை தவறாக மந்திரத்தை உச்சரித்தபோது அதைச் சுட்டிக் காட்டித் திருத்தியது.

தன் கணவன் சிறைப்பட்டதைக் கேட்டும் தனக்குப் பிறந்த குழந்தை விகாரமாக இருப்பதைக் கண்டும் சுமதி மிகவும் மனம் வருந்தினாள். ஆனால் அக்குழந்தை வேத, சாஸ் திரங்களை நன்கு அறிந்திருந்தது கண்டு அவள் மிக்க மகிழ்ச்சி அடைந் தாள். அவள் மகன் சுற்றுவட்டாரப் பண்டிதர்களைவிட மேன்பட்டு விளங்கியது கண்டு திருப்தி அடைந் தாள். இவ்வாறு பனிரெண்டு ஆண்டு கள் கழிந்தன.

அஷ்டவக்கிரன், வந்தியுடன் வாதம் புரிந்து அவரைத் தோற்கடிக்க ஒருவன் இருக்கிறான் என்று காட்ட எண்ணி ஜனகரின் அவைக்குச் செல்ல, அங்கிருந்தவர்கள் அவனைக் கண்டு சிரித்தனர். ஆனால் ஜனகர் அவன் ஒரு மேதாவி எனத் தெரிந்து கொண்டார். வந்தியுடன் வாதம் புரிய அவனை மன்னர் அனுமதித்தார். வந்தி அவன் பொடிப் பயல் தானே என்று எண்ணி ஆரம்பத்தில் அலட் சியமாக இருந்தான். ஆனால் அடுத் தடுத்து அவன் கேட்ட கேள்விகளைக் கேட்டுத் திகைத்து பதில் கூற முடி யாமல் தோற்றுப் போனான். எல்லோ ரும் கைதட்டி ஆரவாரம் செய்தார்கள்.

ஜனகரும் அஷ்டவக்கிரனிடம் ''உனக்கு என்ன பரிசு வேண்டும்?'' என்று கேட்கவே, அவனும் ''என் தந்தையைச் சிறையிலிருந்து விடு தலை செய்யுங்கள்!'' என்று வேண்டி னான். சிறையிலிருந்து கோஹோர் தியானத்தில் ஆழ்ந்து புதிய சக்தி களைப் பெற்றிருந்தார். அவர் தன் மகனை ஆற்றில் குளிக்கச் சொல்லி விட்டு மந்திரங்களை ஓதினார். அவ னும் குளித்துவிட்டுக் கரைக்கு வந் தான். அப்போது உடலின் கோணல் கள் மறைந்து போயின. அவன் அழகிய வாலிபனாகிவிட்டான்.

பிற்காலத்தில் அவன் இயற்றிய நூல் 'அஷ்ட வக்கிர சம்ஹிதை' என்று பெயர் பெற்று உயர்ந்து விளங்கியது.






## மழைக்குப் பிரார்த்தனை!



பருவ மழை பொய்த்து தண்ணீர் பஞ்சம் ஏற்படும்போது அனைவரும் மழை பெய்ய வேண்டுவார்கள். ஒரிஸ்ஸா கிராமங்களில் பெங்கேய் நானீநாசா என்னும் விநோதமான தவளை நடன வேண்டுதல் உள்ளது. கிராமவாசிகள் ஒரு தவளையை நீர் நிறைந்த பானைக்குள் போட்டு, ஒரு நீண்ட மூங்கிலின் மத்தியில் அதைக் கட்டித் தொங்கவிடுகின்றனர். இருவர் அம்மூங்கிலின் முனைகளைத் தூக்கித் தம் தோள்களின் மீது வைத்து நடக்க ஊரார் அவர்களின் பின்னால் செல்கிறார்கள். இந்த ஊர்வலம் அவ்வூரின் கோயிலுக்குப் போய் நிற்க, அங்கு கடவுள் வழிபாட்டை நடத்தியபின் பானையிலுள்ள தவளை ஒரு குளத்திலோ அல்லது ஆற்றிலோ விடப்படுகிறது. அது மழையைத் தேடிப்போய் வரவழைத்துவிடுமாம்.

## மயோங் மந்திரம்

ஒரு மீனை வறுத்து வேக வைத்து ஒரு சட்டியோடு கொண்டு வந்து சாப்பிடும் தட்டில் விருந்தாளிக்கு போடும்போது சட்டியிலுள்ள மீன் அதிலுள்ள வெந்நீரில் நீந்துவதை விருந்தாளி பார்த்தால் எப்படி திடுக்கிட்டுப் போவார்! மயோங் மந்திரவாதிகளைப் பற்றிக் கூறும் கதைகளில் இது ஒன்று. அஸ்ஸாம் மாநில நௌகாம் மாவட்டத்திலுள்ள ஒரு கிராமம் மயோங். முன் காலத்தில் இங்கு ஏராளமான பயங்கர மந்திரவாதிகள் இருந்தார்களாம். மத்திய நூற்றாண்டுகளில் அஸ்ஸாம் நாட்டைத் தாக்க அனுப்பப்பட்ட ராணுவ வீரர்கள் திடீரென மாயமாய் மறைந்துவிடுவது பற்றிய நூற்றுக் கணக்கான கதைகள் இங்கு பிரபலமாகி உள்ளன.





# ஓடி ஓடி உழைத்திடு!

கோடீஸ்வரனான கோவிந்தசாமிக்கும் அலமேலு மங்கைக்கும் திருமணமாகி பதினைந்து ஆண்டுகள் கழிந்த போதிலும் அத்தம்பதிகளுக்குக் குழந்தையே பிறக்கவில்லை.

அப்போது கோவிந்தசாமி தம் ஊரிலிருந்து பத்து மைல் தூரத்திலுள்ள வெங்கடேசுவரருக்கு தனக்குக் குழந்தை பிறந்தால் காணிக்கை செலுத்துவதாக வேண்டிக் கொண்டார். அடுத்த வருடமே அவர்களுக்குஓர் ஆண் குழந்தை பிறந்தது. கோவிந்தசாமி தங்கக் கிரீடம் செய்து வெங்கடேசுவரருக்குக் காணிக்கை செலுத்தினார்.

அதன் பிறகு ஒவ்வொரு ஆண்டிலும் அக்குழந்தையின் ஜென்ம நட்சத்திரத்தன்று வெங்கடேசுவரர் ஆலயத்திற்குச் சென்று பெருத்த அளவில் அர்ச்சனை செய்வதை வழக்கமாகக் கொண்டார்.

அக்குழந்தையின் நான்காவது ஜென்ம நட்சத்திர நாளில் அர்ச்சனை செய்ய அவர் தம் ஊரிலிருந்து புறப்பட்டு வெங்கடேசுவரர் ஆலயத்தை தன் குடும்பத்தவருடன் அடைந்தார். அவரும் அவரது மனைவியும் வெங்கடேசுவரரின் விக்கிரகத்தின் முன் கண்களை மூடிக் கொண்டு தியானத்தில் மூழ்கினார்கள்.

அப்போது அவரது நான்கு வயது மகன் மெதுவாக நடந்து கோயிலுக்கு வெளியே சென்றான். கோயிலருகே ஒரு கால்வாய் இருந்தது. அதைக் கண்ட கோவிந்தசாமியின் மகன் ஓடிப்போய் அதில் குதித்துவிட்டான். அப்போது கால்வாயில் நீர் வேகமாகப் பாய்ந்து கொண்டு

- ச. வெங்கடாசலம் -



இருந்ததால் நீரோட்டத்தில் அவன் அடித்துச் செல்லப்படலானான்.

கால்வாயில் ஒரு சிறுவன் அடித்துச் செல்லப்படுவதைக் கண்ட ஒரு பிச்சைக்காரன் சட்டெனக் கால்வாயில் குதித்து அச்சிறுவனைத் தூக்கிக் கொண்டு கரைக்கு வந்தான். இதே சமயம் தம் மகனைக் காணவில்லையே எனக் கண்டு பதறிப் போய் கோயிலுக்கு வெளியே வந்து கோவிந்தசாமியும் அவரது மனைவியும் தேடலானார்கள். அப்போது ஒரு பிச்சைக்காரன் தம் மகனைத் தூக்கிக் கொண்டு கால்வாயிலிருந்து வருவதைக் கண்டு மகிழ்ந்து ஓடிப்போய் அவனிடமிருந்து தம் மகனை வாங்கிக் கொண்டார்கள்.

கோவிந்தசாமியும் அந்தப் பிச்சைக்காரனுக்குத் தன் நன்றியைத் தெரிவித்து ''அப்பனே! நீ என் ஒரே மகனைக் காப்பாற்றினாய். அதனால் நீ என்ன கேட்டாலும் கொடுக்கிறேன்,'' என்றார். அவனும் ''ஐயா! எனக்கு ஒரே ஒரு ஆசை. என்னை ஒருநாள் மட்டும் எல்லோரும் ஒரு கோடீஸ்வரரைப் போல மரியாதை செய்ய வேண்டும். அதுபோதும்,'' என்றான்.

கோவிந்தசாமியும் அவனைத் தம்மோடு ஊருக்கு அழைத்துச் சென்றார். அவனுக்குப் பணக்காரரர்கள் அணியும் விலையுயர்ந்த பகட்டான ஆடைகளைக் கொடுத்து அவற்றை அணிந்து கொள்ளும்படி கோவிந்தசாமி கூறினார். அவனும் அவற்றை அணிந்து கொண்டான்.

அன்றைய விருந்தில் கலந்து கொள்ள வந்த ஊர்ப் பிரமுகர்களிடம் எல்லாம் கோவிந்தசாமி பிச்சைக்காரனைத் தன் நண்பர் என்றும் கோடீஸ்வரர் என்றும் அறிமுகப் படுத்தவே, அவர்களும் மிகவும் மரியாதையுடன் வணங்கி ''தாங்கள் நலமா? தங்கள் வியாபாரங்கள் எப்படி நடக்கின்றன?'' என்றெல்லாம் பணிவுடன் கேட்டார்கள். பிச்சைக்காரனும் தக்க பதில்களைக் கூறி சமாளித்து வந்தான். அன்று கோவிந்தசாமியின் வீட்டிற்கு வந்தவர்கள் எல்லோருமே பிச்சைக்காரனை கோவிந்தசாமிக்குச் சமமாக மதித்து மரியாதை காட்ட பிச்சைக்காரனும் மகிழ்ந்து போனான்.

அன்று நள்ளிரவு ஆனதும் பிச்சைக்காரன் கோவிந்தசாமி கொடுத்த

ஆடைகளைக் களைந்துவிட்டுத் தன் பழைய கந்தலான ஆடைகளை அணிந்து கொண்டு, ''ஐயா! இன்று தான் என் மனம் குளிர்ந்தது. நேற்று வரை என்னைப் பார்த்தவர்கள் எல்லாம் 'டேய் பிச்சைக்காரா? போடா, தரித்திரம் பிடித்தவனே!' என்று கண்டபடி பேசினார்கள். இன்றோ என் மனம் குளிர மரியாதை செய்து, நலன் விசாரித்தார்கள். இனி நான் முன்போல பிச்சை எடுத்துக் காலம் கழிக்கிறேன். எனக்கு விடை கொடுங்கள்!'' என்று கூறினான்.

அப்போது கோவிந்தசாமி ''நான் சொல்வதைக் கேள். நீயோ திட காத்திரமாய் இருக்கிறாய். குருடோ, செவிடோ, நொண்டியோ, முடமோ அல்லது ஊமையோ அல்ல. நீ ஏன் பிச்சை எடுத்து பலர் கேவலமாக உன்னைப் பேசும்படி வாழ வேண்டும்? ஏதாவது ஒரு வேலை செய்து கௌரவமாக இரு!'' என்றார்.

அவனும் ''எனக்கு யார் வேலை கொடுப்பார்கள்?'' என, கோவிந்தசாமியும் ''நான் கொடுக்கிறேன். என் தோட்டத்தில் தோட்டக்காரனாக வேலை செய். உழைத்தால்தான் ஒருவனுக்கு கௌரவம்,'' என்றார். பிச்சைக்காரனும் அந்த வேலையை ஏற்றுக் கொண்டான்.

சமையலறையில் இருந்த அலமேலுமங்கை தன் கணவனை அங்கே வரச்சொல்லி அவரிடம் ''என்ன இது? நம் மகனைக் காப்பாற்றியவருக்குக் கேவலம் ஒரு தோட்டக்காரன் வேலையா கொடுப்பது? ஓரிரெண்டு லட்சம் என்று ஒரு பெரிய தொகையாகப் பணமாகக் கொடுத்திருக்கலாமே!'' என்றாள்.

கோவிந்தசாமியோ ''அதுதான் கூடாது. அவன் பிச்சை எடுத்து சோம்பலுக்கு அடிமையாகிவிட்டான். நாம் பணம் கொடுத்தால் வேலை செய்யாமல் சோம்பேறியாக இருப்பான். பணமும் விரைவில் செலவாகி விடும். மறுபடியும் அவன் பிச்சை எடுப்பான். அவன் ஓடி ஓடி உழைக்க வேண்டும். அதனால் தான் அவனுக்குத் தோட்ட வேலையைக் கொடுத்தேன்,'' என்றார்.

அதைக் கேட்ட அலமேலுமங்கை திருப்தி அடைந்தாள்.



## நான்கு மாதமான பிறகே...




அமெரிக்காவிற்கு வந்த 62 வயதான வியட்நாம்வாசி கலிபோர்னியாவில் லாங் பீச்சிலிருந்து படகில் கடலில் ஒருநாள் பயணமாகச் சென்றார். ஆனால் நான்கு மாதங்கள் கடலிலேயே வாசம் செய்ய வேண்டியதாயிற்று. காணாமல் போன அவரை அமெரிக்கப் போர்க் கப்பல் ஒன்று கண்டுபிடித்துக் கொண்டு வந்தது.

கடலில் இருக்கையில் ஆமை, மீன், பறவைகளை படகின் கொடிக் கம்பத்தைப் பயன்படுத்திப் பிடித்து உணவாக அவர் உண்டாராம்!

## செவ்வாய் கிரகத்திற்குச் சுண்டெலிகள்

மனிதன் செவ்வாய் கிரகத்திற்குப் போக என்னென்னவோ ஆய்வுகளை நடத்திப் பார்க்கிறான். இப்போதைய கணக்குப்படி அங்கு போக தொடர்ந்து 6 மாத காலம் பயணம் செய்ய வேண்டுமாம். பூமியைவிட 38 சத ஈர்ப்பு சக்தி குறைவாக உள்ள செவ்வாய் கிரகத்தில் மனிதன் இருக்க முடியுமா என்று விஞ்ஞானிகள் ஐயப்படுகிறார்கள். அமெரிக்காவின் மெஸசஸெட்ஸ் தொழில் நுணுக்க அமைப்புடன் ஆஸ்திரேலியாவின் ஆராய்ச்சியாளர்கள் கூட்டாக முயன்று 2003ல் செவ்வாய் கிரகத்திற்குச் சுண்டெலிகளை அனுப்பத் திட்டம் போட்டிருக்கிறார்கள். அச்சுண்டெலிகள் அங்கு உயிரோடு இருந்தன என்றால் மனிதனும் அங்கு உயிருடன் இருக்க முடியும் என்பது விஞ்ஞானிகளின் கணிப்பு.





# இரு மனங்கள்

காட்டூர் கந்தசாமி தன் உடலைத் தேற்றிக் கொள்ள வைத்தியர் கூறியதன் பேரில் ஆரோக்கிய மலை ஊரான பேரூருக்கு சென்றார். அங்கு அவரது உறவினர் வீட்டில் தங்கினார். அவர் தாம் ஓரிரு மாதங்கள் தங்கி தம் உடலைத் தேற்றிக் கொள்ள வந்திருப்பதாகக் கூறவே அந்த உறவினரும் ''தாராளமாகத் தங்குங்கள்!'' என்று முக மலர்ச்சியுடன் கூறினார்.

கந்தசாமியும் மாலையானதும் முதல் நாள் உலாவப் போய்க் கடைத் தெருவின் பக்கம் சென்றார். அப்போது அவருக்கு நல்ல மாதுளம் பழத்தைச் சாப்பிட்டால் உடலுக்கு நல்லது என்று வைத்தியர் கூறியது நினைவிற்கு வந்தது.

அன்று பழக்கடையில் நன்றாக இருந்தது என்று எண்ணி மாதுளம் பழத்தை வாங்கிக் கொண்டு சென்றார். வீட்டிற்குப் போய் அதை அரிந்து முத்துக்களை உதிர்த்ததில் அவற்றில் பாதிக்கும் மேல் அழுகலாக இருந்தன. அதனால் அவர் அன்றுமுதல் ஒவ்வொரு கடையிலிருந்தும் மாதுளம்பழத்தை வாங்கிப் பார்த்தார். எதுவுமே நன்றாக இருக்கவில்லை. ஒருநாள் புதிதாக ஒருவன் பழங்களை விற்றுக் கொண்டிருந்ததைக் கண்டார். அவனிடம் எல்லாப் பழங்களுமே நன்றாக இருந்தன.

கந்தசாமி ஒரு நல்ல மாதுளம் பழமாகப் பொறுக்கி எடுக்கப் போனார். பழக்காரனோ ''பழத்தைப் பொறுக்கி எடுக்கக் கூடாது. நான் விற்கும் பழங்கள் எல்லாமே நல்லவை. விலையும் ஒரே விலை தான். நான் கொடுக்கும் பழத்தைத் தான்

- கிருஷ். சுதா -

வாங்கிக் கொண்டு போக வேண்டும். சம்மதமானால் சொல்லுங்கள், பழத்தைக் கொடுக்கிறேன்,'' என்றான். அதைக் கேட்ட கந்தசாமி ''என்னப்பா! இப்படிப் பேசுகிறாய், உன் பெயர் என்ன?'' என்று கேட்டார்.

அவனும் ''என் பெயர் கிருஷ்ணன். என் பழங்களில் எதுவுமே அழுகினது என்றோ, கெட்டது என்றோ கிடையாது. ஒருநாள் என்னிடம் பழம் வாங்குபவர் தினமும் என்னிடம் தான் பழங்களை வாங்கிச் செல்வார்,'' என்றான். கந்தசாமியும் ஆறு மாதுளம்பழங்களை வாங்கிக் கொண்டு வீட்டிற்குப் போனார். வீட்டில் எல்லோரும் அவற்றைச் சாப்பிட்டுவிட்டு ''பேஷ், பேஷ்! ரொம்ப நல்லா இருக்கே!'' என்று கூறி மகிழ்ந்தனர்.

அன்றுமுதல் அவர் தினமும் கிருஷ்ணனிடமே பழங்களை வாங்கிக் கொண்டு போனார். இப்படியாக இரண்டு மாதங்கள் கழிந்தன. கந்தசாமி மறுநாள் காலை தம் ஊருக்குப் போகத் தயாரானார். அதனால் அன்றும் மாலையில் கிருஷ்ணனின் கடைக்குச் சென்றார். அன்று அக்கடையில் எல்லாப் பழங்களுமே நன்றாக இருக்கவில்லை. ஆனால் கிருஷ்ணனோ ''நல்ல பழங்கள். இன்று வாங்கினால் நாளை என்னையே தேடுவீர்கள்!'' என்று கூவிக் கொண்டிருந்தான்.

கந்தசாமிக்கோ அன்று அந்தப் பழங்களுக்கு கிருஷ்ணன் கூறும் விலையைக் கொடுக்க மனமே



இல்லை. அதனால் கிருஷ்ணன் பழங்களை எடுத்து நீட்டியபோது அவர் ''அடடா! என்னிடம் இப்போது இதை வாங்கப் போதிய பணம் இல்லையே! எவ்வளவு பணம் இருக்கிறது என்று பார்க்கிறேன்,'' என்றார்.

கிருஷ்ணனும் ''பரவாயில்லை. பழங்களை எடுத்துக் கொண்டு இருக்கும் பணத்தைக் கொடுங்கள். நாளை மீதப் பணத்தைக் கொடுங்கள்,'' என்றான். கந்தசாமியும் சட்டைப் பையிலிருந்து கொஞ்சம் பணத்தை எடுத்து ''கிருஷ்ணா! நீ சொன்ன விலையில் கால் பங்கு பணம்தான் உள்ளது. இதை வாங்கிக் கொள். மீதத்தை நாளை கொடுக்கிறேன்,'' என்று கூறி அந்தப் பணத்தைக் கொடுத்து பழங்களை வாங்கிக் கொண்டு சென்றார்.

போகும் வழியில் அவர் தம்

மனதில் 'பயல் என்னை ஏமாற்றப் பார்த்தான். நானா ஏமாறுவேன்? நான் கொடுத்ததுதான் இதன் சரியான விலை. நாளை இவனை நான் பார்க்கவா போகிறேன்? காலையிலேயே ஊருக்குக் கிளம்பிவிடுவேனே. கெட்ட பழங்களைக் கொடுத்த அவனுக்கு நான் மீதப் பணத்தைக் கொடுக்காமல் போவதுதான் நான் அவனுக்கு அளிக்கும் தண்டனை,'' என்று எண்ணிக் கொண்டே சென்றார்.

கிருஷ்ணனோ, ''இன்று கெட்ட பழங்களை இவர் தலையில் கட்டி விட்டதால் என்னைத் திட்ட நாளை இங்கே வருவார். இவரைப் போல இன்னும் பலர் வந்து ஏமாறுவார்கள். ஏனென்றால் நாளை காலையிலேயே இந்த ஊரைவிட்டுப் போய்விடப் போகிறேனே. நல்லவேளை என்னிடம் இருந்த எல்லா அழுகல் பழங்களையும் ஒருவழியாக விற்றுவிட்டேன்,'' என எண்ணினான்.

மறுநாள் காலையில் வாடகைக் குதிரை வண்டியில் கந்தசாமி அந்த ஊரைவிட்டுக் கிளம்ப, அவரோடு வண்டியில் வேறு இரு பயணிகளும் இருந்தனர். கந்தசாமி வண்டியின் பின்புற ஓரத்தில் உட்கார்ந்திருந்தார். வண்டியும் ஊர் எல்லையைத் தாண்டி சென்று கொண்டிருந்தபோது வழியில் நின்ற ஒருவன், ''என்னையும் ஏற்றிக் கொள். நான் குளத்தூருக்குப் போக வேண்டும்,'' என்றான்.

வண்டிக்காரனும் ''கிருஷ்ணா! நீ இனி எங்கள் ஊரில் பழ வியாபாரம் செய்யமாட்டாயா?'' என்று கூறி வண்டியில் முன்பக்கம் உட்காரச் சொன்னான். கிருஷ்ணனும் ''ஆம். இனி இங்கு வேலை இல்லை. குளத்தூரில் நல்ல வேலை கிடைத்துவிட்டது. நேற்று அழுகல் பழங்களை எல்லாம் எல்லோர் தலையிலும் கட்டிவிட்டேன். என்னைத் தேடி யார் வந்தாலும் என்னைப் பார்க்க முடியாதே!'' என்றான்.

கந்தசாமி முன்பக்கம் ஏறி உட்கார்ந்திருந்த கிருஷ்ணனைப் பார்த்துத் திகைத்துப் போனார். கிருஷ்ணனும் கந்தசாமியைப் பார்த்து அதிர்ச்சியில் மலைத்துப் போனான். இருவரும் எதுவும் பேசவில்லை. காரணம் மன உறுத்தலே.





# வேலியே பயிரை மேய்ந்தது!

சூரபுரத்தில் திருட்டுகள் அதிகரிக்கவே அதற்குக் காரணம் ராஜசேகரன் என்ற உயர் காவலதிகாரி தான் என்றும், அவன் திருடர்களுக்கு ஆதரவு அளித்து அவர்கள் திருடுவதில் பாதியை லஞ்சமாகப் பெறுகிறான் என்ற புகார் எழுந்தது. அது உண்மை தானா என அறிய அந்நாட்டு மன்னன் ஒருநாள் இரவில் மாறுவேடத்தில் நகரில் திரிந்தவாறே ஒரு சத்திரத்தை அடைந்தான்.

அப்போது சத்திர நிர்வாகி, ''உன்னிடம் பணம் ஏதாவது இருந்தால் என்னிடம் கொடுத்து வை. அப்போதுதான் அது உன் அறையிலிருந்து திருட்டுப் போகாமல் இருக்கும்,'' என்றான். மாறுவேடத்தில் வந்த மன்னனோ ''வேண்டாம். நானே என் பணம் ஆயிரம் வராகனை என் அறையில் பததிரமாக வைத்துக் கொள்கிறேன். எனக்கு நல்ல அறையாக மட்டும் கொடு,'' என்றான்.

நிர்வாகியும் ''நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிவிட்டேன். பிறகு உன் இஷ்டம். பணம் பத்திரம்,'' எனக் கூறி ஓர் அறையைக் காட்டினான். மன்னன் அதில் போய் பணமூட்டையைத் தன்னருகே வைத்துக் கொண்டு படுத்துத் தூங்கினான்.

சத்திர நிர்வாகியும் மன்னனும் பேசியதை வழிப்போக்கன் போல இருந்த ஒருவன் கவனமாகக் கேட்டான். மன்னனிடம் ஆயிரம் வராகன்கள் மூட்டைக்குள் இருப்பது அவனுக்குத் தெரிந்தது. அவன் திருடன். நள்ளிரவிற்குமேல் மன்னனின்

- சங்கர சுவாமி -



அறைக்குள் நுழைந்து பணமிருந்த மூட்டையைத் திருடிக் கொண்டு போய்விட்டான். காலையில் எழுந்த மன்னன் சத்திர நிர்வாகியைக் கண்டு ''நேற்றிரவு என் பணம் திருடு போய் விட்டது. காவலதிகாரியிடம் இது பற்றிப் புகார் மனு கொடுக்க வேண் டும்,'' என்றான்.

சத்திர நிர்வாகியோ, ''அதனால் ஒரு பயனும் இருக்காது. நேற்றிரவே பணத்தை என்னிடம் கொடுத்து வையுங்கள் என்று நான் கூறியது அது திருடு போய்விடும் என்ற பயத்தில் தான்,'' என்றான். மன்னனும் ''பரவா யில்லை. நீங்கள் என் ஆயிரம் வரா கன்கள் திருடு போனதாக எழுதி யுள்ள இந்தப் புகார் மனுவைக் காவலதிகாரியிடம் கொடுத்துவிடுங் கள். நான் வேலைகளை முடித்துக் கொண்டு மாலையில் இங்கு வரு கிறேன்,'' என்று கூறிப் புகார் மனு வைக் கொடுத்துவிட்டுச் சென்றான்.

அன்று மாலை நேரம் கழித்தே மன்னன் சத்திரத்தில் தன் அறைக்குச் சென்றான். சற்றுநேரத்திற்குப் பின் அவன் முன்பின் பார்த்திராத ஒரு மனிதன் அந்த அறைக்குள் நுழைந்து ''ஏய்! பொய் புரட்டுக்காரா!'' என்று கூவினான். மன்னனும் ''யாரப்பா நீ? நான் உன்னை இதற்குமுன் பார்த்ததே இல்லையே! என்ன வேண்டும்?'' என்று கேட்டான்.

அதற்கு அவன் ''நேற்றிரவு உன் மூட்டையைத் திருடிக் கொண்டு போனவன் நான் தான். அதில் ஆயிரம் வராகன்கள் இருந்ததாக நீ காவலதி காரியிடம் புகார் கொடுத்திருக் கிறாயே. அது பொய். அதில் நூறு வராகன்கள் தான் இருந்தன. காவலதி காரி மற்ற பணத்தை எடுத்து நான் எங்கோ மறைத்து வைத்திருப்பதாகக் குற்றம் சாட்டுகிறான். நான் திருடு வதில் பாதியை அவனுக்கு கொடுத்து விட வேண்டும் என்பது ஒப்பந்தம். நான் கொடுத்த ஐம்பது வராகன்களை வாங்கிக் கொண்டு 'புகார் மனுவில் ஆயிரம் வராகன்கள் திருடு போன தாக உள்ளது. பாக்கி நானூற்றைம்பது வராகன்களைக் கொண்டுவா!' என்று கூறுகிறான். நான் எவ்வளவு கூறியும் அவன் நம்பவில்லை. அதனால் நீ என்னோடு வந்து அவனிடம் உன் மூட்டையில் ஆயிரம் வராகன்கள் இல்லை, நூறு வராகன்களே இருந் தன என்ற உண்மையைச் சொல். அப்போது தான் அவன் என்னை

நம்புவான். நானும் தொடர்ந்து திருட்டுத் தொழிலில் ஈடுபட முடியும்,'' என்றான்.

மன்னனோ ''நான் வரமாட்டேன். திருட்டுப் பயலுக்கு நேர்மை என்று இருக்கிறதா?'' என்று கேட்க, திருடனோ ஒரு கத்தியை எடுத்து மன்னனை மிரட்டியவாறே ''நீ இப்போது வராவிட்டால் உன்னைக் குத்திக் கொன்றுவிடுவேன்,'' என்று மிரட்டினான். மன்னன் கத்தியைத் தட்டிவிட அது கீழே விழுந்தது.

மன்னன் அதை எடுத்துக் கொண்டு ''உன்னைக் காவலதிகாரியிடம் ஒப்படைக்கிறேன்,'' எனவே அவனும் ''ஆகா! தாராளமாகச் செய். ஆனால் நீ நூறு வராகன்களே இருந்தன என்ற உண்மையை கூறிவிடு. இல்லாவிட்டால் அவன் என்னைக் கொன்றே விடுவான்,'' என்றான்.

அதைக் கேட்ட மன்னன் ஆச்சரியப்படவே, அவனும் ''நான் திருடனே ஆனாலும் நேர்மையானவன். நான் பொய் சொல்கிறேன் என்று காவலதிகாரி என்னைச் சவுக்கால் அடித்தான்,'' எனக் கூறித் தன் முதுகைக் காட்டினான். அதில் தழும்புகள் இருந்தன.

அப்போது மன்னன் தான் யாரென்பதை கூறி, ''இனி காவலதிகாரி உன்னைத் தொந்தரவு செய்யமாட்டான். நீ ஏதாவது நல்ல தொழிலைச் செய்து பிழைத்துக் கொள்!'' என்று கூறி அனுப்பினான்.

பிறகு அவன் வீரர்களை அனுப்பி காவலதிகாரியைப் பிடித்து இழுத்து வரச் சொல்லி அவன் வந்ததும் ''லஞ்சம் வாங்க ஒரு திருடனிடம் எதிர்பார்க்கிறாயே, அதே நேர்மையை நீ உன் அரசாங்க வேலையில் காட்டவில்லையே! திருடர்களைப் பிடிக்க வேண்டிய நீ லஞ்சம் பெற்று அவர்களை மேலும் ஊக்குவிக்கிறாயே. வேலியே பயிரை மேய்ந்தால் என்ன மிஞ்சும்? அதுபோலத்தான் உன் செயல். இனி அரசாங்க வேலை உனக்குக் கிடையாது. லஞ்சம் வாங்கியதற்காக உனக்குச் சிறை தண்டனை அளிக்கிறேன்,'' என்றான்.

தலைகுனிந்து நின்ற காவல் அதிகாரியை வீரர்கள் சிறைச் சாலைக்கு இழுத்துச் சென்றார்கள்.



## இமாசலப் பிரதேச கிராமியக் கதை

மலைகள் நிறைந்த இமாசலப் பிரதேசம் இமயமலைத் தொடரின் மேற்குப் பகுதியில் அமைந்ததாம். இம்மலைகள் 350 மீட்டரிலிருந்து 6975 மீ. உயரம் வரை உள்ளன. சுதந்திரத்திற்குப் பின் மலை சமஸ்தானங்களை இணைத்து யூனியன் பிரதேசமாக ஆக்கப்பட்டது. இவை சிம்லாவைச் சுற்றிலும் உள்ள பகுதிகள். பஞ்சாபின் மலைப் பகுதி சமஸ்தானங்கள் இதனுடன் 1966 நவம்பர் 1ல் இணைக்கப்பட்டன. இமாசலப் பிரதேசம் முழு மாநில அந்தஸ்தை 1971 ஜனவரி 25ல் அடைந்தது.

சத்லஜ், ரவி, ப்யாஸ், பர்பதி ஆகிய நதிகள் இங்கு பாய்கின்றன. இங்கு பல ஏரிகள் உள்ளன. இம்மாநிலத்தின் பரப்பளவு 55,673 ச.கி.மீ. மக்கள் தொகை 6,077,248. இதன் வடக்கே ஜம்மு, கஷ்மீரும், தென்கிழக்கில் உத்திரப் பிரதேசமும் உள்ளன. தெற்கில் ஹரியானாவும், மேற்கிலும் தென்மேற்கிலும் பஞ்சாபும் உள்ளன. சீனா கிழக்கில் உள்ளது.

இதன் தலைநகர் சிம்லா. ஆட்சி மொழி ஹிந்தி. வட்டார மொழிகள் சிலவும் இங்கு பேசப்படுகின்றன.

# பிசாசின் சட்டை

பூய்கர் என்ற கிராமத்தில் பஞ்சோக் என்ற பிரபல சோதிடன் இருந்தான். அவனிடம் சோதிடம் கேட்கப் பல இடங்களிலிருந்தும் மக்கள் வந்து கொண்டிருந்தார்கள். அவன் கிரகநிலைகளை எடுத்துக் கூறி சோதிடம் சொல்வதில் கைதேர்ந்தவன். அவன் சாமியாடி தெய்வ வாக்கும் கூறுபவன். மக்கள் தம் முன்னோர்களுடன் தொடர்பு கொள்ள அவர்களது ஆவிகளை வரவழைத்து பேச வைக்கவும் செய்து வந்தான்.

ஒருநாள் பக்கத்து ஊரான சதின்கிரி



யின் கிராமத் தலைவர் பஞ்சோக்கைக் காணத் தன் ஆளை அனுப்பினான். அவன் பஞ்சோக்கிடம் ''எங்கள் ஊருக்கு ஒரு பிசாசு வந்து தொல்லை கொடுக்கிறது. எங்கள் பொருள் களைத் திருடுகிறது. ஆடுமாடுகளை விரட்டுகிறது. சட்டி, பானைகளை உடைக்கிறது. வீட்டில் வைத்திருக் கும் விறகுகளை எரித்துவிடுகிறது. குழந்தைகளைப் பயமுறுத்துகிறது. இதை எல்லாம் சகித்தோம். ஆனால் இப்போது நிலைமை கட்டுக்கு அடங் காமல் போய்விட்டது,'' என்றான்.

பஞ்சோக்கும் ''அப்படி என்ன நடந்துவிட்டது?'' என்று கேட்கவே, அவனும் ''ஆமாம். நேற்று கிராமத் தலைவர் பஞ்சாயத்துக் கூட்டத்தில் இருந்தார். அவரும் கிராமப் பிரமுகர் களும் அப்போது ஒரு வழக்கை விசாரித்துக் கொண்டிருந்தார்கள். அப்போது திடீரென கிராமத் தலை வரின் தாடி மறைந்துவிட்டது,'' என்று கூறி நிறுத்தினான்.



அதுகேட்டு பஞ்சோக் ''ஆ! அதி சயமாக இருக்கிறதே!'' எனக் கூற, அந்த ஆளும் ''இது அந்தப் பிசாசின் வேலைதான். அது அவரது தாடியை மென்று விழுங்குவதை நாங்கள் பார்த்தோம். அதைப் பிடிக்கவும்

## சம்பா கைக்குட்டை



சம்பா கைக்குட்டை இமாசலப் பிரதேசத்தின் தனிச் சிறப்பாகும். இதில் செய்யப்படும் பூத்தையலே இதற்குக் காரணம். சாதாரணமாகக் கைக்குட்டைகள் மிகச் சிறியனவாகத் தானே இருக்கும்? ஆனால் சம்பா கைக்குட்டைகள் சற்றுப் பெரியனவாகவே இருக்கும். ஆண்கள் இவற்றைத் தோள் துண்டு போலவும், பெண்கள் முகத்திரைப் போலவும் பயன்படுத்துகிறார்கள். மணப்பெண்கள் இவற்றைத் தம் பொக்கிஷமாகக் கருதுகிறார்கள்.

இமாசலப் பிரதேசம் பூத்தையல் கைக்குட்டைகளுக்கு மட்டுமல்லாமல் சால்வைகளுக்கும் போர்வைகளுக்கும் விரிப்புகளுக்கும் பெயர் பெற்றது. சம்பா வண்ண ஓவியங்களும், காங்க்ரா, கோம்பா ஓவியக் கலையும் பிரபலமானவை.

முயன்றோம். ஆனால் எங்களால் முடியவில்லை. எங்கள் தலைவரின் அருமையான தாடி போயே போய் விட்டது. நீங்கள் வந்து அந்தப் பிசாசை விரட்ட வேண்டும்,'' என்றான்.

பஞ்சோக்கும் சில மூலிகைகளையும் கைத்தடியையும் வேறு சில சிறு பொருள்களையும் எடுத்துக் கொண்டு அந்த ஆளுடன் சதின்கிரிக்குப் போனான்.

கிராமத் தலைவரின் வீடு இருளில் மூழ்கி இருந்தது. வீட்டில் இருந்தவர்கள் எல்லோரும் துயரத்தால் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டிருந்தார்கள். பஞ்சோக்கும் அவனுடன் வந்தவனும் வீட்டிற்குள் சென்று கிராமத் தலைவன் முன் நின்றார்கள். அவனும் பேச நா எழாமல்



சோதிடனை உட்காரும்படி சைகை செய்தான். தேநீர் கொடுத்து உபசரித்தான். பிறகு மெதுவாக அவன் ''என் ஆள் விஷயத்தைக் கூறி இருப்பானே. இந்தப் பிசாசை விரட்ட ஏதாவது ஒரு வழி செய்தாக வேண்டும். நேற்று என் தாடியைத் தின்றுவிட்டது. நாளை இன்னொருவருடைய தலைமுடியைத் தின்றாலும் தின்றுவிடும். பிறகு காது, மூக்கு என்று ஒவ்வொன்றாகப் பதம் பார்க்கும். எனவே அதை அடக்கி ஒடுக்கி விரட்ட வேண்டும்,'' என்றான்.

பஞ்சோக்கும் ''கவலைப்படாதீர்கள்! நான் அதை விரட்டிவிடுகிறேன்,'' எனக் கூறி ஒரு துணியை எடுத்துத் தலையில் கட்டிக் கொண்டு தன் தடியைச் சுழற்றினான். பிறகு தீ வளர்த்து ஹோமம் செய்து அதில் ஏதோ ஒரு பொடியைப் போட்டான். உடனே புகை அடர்ந்து எழுந்தது. அதனால் அங்கே இருந்தவர்கள் எல்லோரும் தும்மினார்கள். அப்போது அவன் சில ஊசிகளை குத்திக் கொண்டு ஏதோ மந்திரங்களை உச்சரித்தான்.

மறுவிநாடியே சதின்கிரிக்குத் தொல்லை கொடுக்கும் பிசாசு பஞ்சோக் முன் வந்து நின்றது. அது வெப்பத்தைத் தாங்க முடியாமல் தன் சட்டையைக் கழற்றிப் போட்டு விட்டு ஓடி மறைந்தது.

அதுகண்டு எல்லோரும் ''இனி பிசாசின் தொல்லை இராது,'' எனக் கூறி மகிழ்ந்தார்கள். பஞ்சோக் அந்தச் சட்டையை எடுத்து சுருட்டி

# ஆப்பிள்கள்



இமாசலப் பிரதேசம் தங்கநிற ஆப்பிள்களுக்குப் பெயர் பெற்றது. அமெரிக்கப் பாதிரியாரான சாமுவேல் ஈவான்ஸ் (சத்தியானந்த்) முதலில் இங்கு ஆப்பிளைப் பயிரிட்டார். இதன் விதைகளை அவர் தம் நாட்டிலிருந்து 1904ல் கொண்டு வந்தார்.

இன்று இம்மாநிலத்தில் கோட்கட் என்பது ஆப்பிள் விளையும் மையமாக உள்ளது. ஆப்பிள் தோட்டங்கள் காங்டா, தானேதார் ஆகிய பள்ளத்தாக்குகளில் ஏராளமாக உள்ளன. ஆப்பிளைத் தவிர தேயிலையும் பல பள்ளத்தாக்குகளில் பயிரிடப்படுகிறது.

பத்திரமாக வைத்துக் கொண்டான். சதின்கிரி மக்கள் பஞ்சோக்கிற்கு ஏராளமான பணமும் பொருள்களும் கொடுத்து அவன் செய்த உதவிக்கு நன்றி செலுத்தி அனுப்பி வைத்தார்கள்.

அவற்றை எல்லாம் மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு பஞ்சோக் நடந்து சென்று கொண்டிருந்தான். அந்த ஊர் எல்லையைத் தாண்டி கொஞ்ச தூரம் சென்றபின் அவன் தன் முன் யாரோ வந்து நின்றதைக் கண்டான். அது அவன் விரட்டிய பிசாசு தான்.

அது அவனிடம் ''என் சட்டையைக் கொடுத்துவிடு!'' என்றது. அவனோ மூட்டையை இறுகப் பிடித்துக் கொண்டு ''முடியாது. நான் கொடுக்கமாட்டேன்,'' என்றான். அதைக் கேட்டு பிசாசு ''என் சட்டையைக் கொடு. உனக்கு நான் பல விதத்திலும் உதவுவேன்,'' என்றது. அப்போது பஞ்சோக் அந்த சட்டைக்கு ஏதோ ஒரு சக்தி உள்ளதால் தான் அதைப் பிசாசு கேட்கிறது எனப் புரிந்து கொண்டான்.

பிசாசு மீண்டும் மீண்டும் கேட்டுப் பயனில்லாது போகவே அது வெறுப்புடன் ''உன் அடிமையாக இனி இருக்க வேண்டும் என்றுதான் என் தலையில் எழுதி இருக்கிறதா?'' என்று கூறியது.

அப்போது பஞ்சோக், ''ஓ! இதுவா விஷயம்!! உனக்கு உன் சட்டையைக் கொடுக்கமாட்டேன். இனி நான் சொல்லும் வேலைகளை எல்லாம் செய்யத்தான் வேண்டும்,'' என்றான்.

அவன் தன் ஊருக்குப் போனதும் பிசாசின் சட்டையைப் பற்றித் தன் மனைவியிடம் எதுவும் கூறவில்லை.



மற்ற பொருள்களைத் தன் மனைவி யிடம் கொடுத்துவிட்டு பிசாசின் சட்டையை மட்டும் பொட்டலமாகக் கட்டித் தன் மனைவி பாராதபோது பரண் மீது போட்டுவிட்டான்.

பிசாசிடம் வேலை வாங்க முடி யுமாதலால் அவன் அதனிடம் தன் வீட்டைச் சுற்றியுள்ள பனிக்கட்டி களை அகற்றச் சொன்னான். தண்ணீர் கொண்டு வருதல், வயலை உழுது விதை விதைத்தல், பயிரை அறு வடை செய்தல், காட்டிலிருந்து விறகு வெட்டி எடுத்து வருதல் என்று வேலைகளைச் சொல்லிச் செய்ய வைத்தான்.

இப்போதெல்லாம் பஞ்சோக் வேலை எதுவும் செய்யாமல் இருக்க லானான். அதனால் அவனது உடல் பருத்துவிட்டது. சோம்பேறியாகவும் ஆகிவிட்டான். பிசாசோ இளைத்துக் கொண்டே போயிற்று. பிசாசு எல்லா வேலைகளையும் செய்ய, பஞ்சோக் ஒரு வேலையும் செய்யாமலேயே இருந்தான். சோதிடம் பார்ப்பதைக் கூட விட்டுவிட்டான்.

பிசாசு செய்த வேலைகளால் பஞ்சோக்கின் வருமானம் அதிகரித் தது. பெரிய மனிதனாகிவிட்ட பஞ்சோக்கை பக்கத்து ஊர்க்காரர்கள் தம் ஊர் கோயில் திருவிழாவில் கலந்து கொள்ள வேண்டும் என்று அழைக்கவே, அவனும் காலையில் எழுந்து அவ்வூருக்குச் சென்று விட்டான்.

அன்று பிசாசு வெளியே போய் தலைமைப் பிசாசிடம் தன் நிலை யைக் கூறிக் கண்ணீர் வடித்தது. அதுவும் அப்பிசாசைத் தேற்றி ''நீ கவலைப்படாதே! நான் இன்றே பஞ்சோக் வீட்டிற்குப் போய் உன் சட்டையை எடுத்துக் கொண்டு வந்து கொடுக்கிறேன்,'' என்று கூறிவிட்டு ஒரு மாடு மேய்ப்பவனைப் போல உருமாறி பஞ்சோக்கின் வீட்டிற்குச் சென்றது.

அது பஞ்சோக்கின் மனைவியிடம் ''நான் பஞ்சோக்கின் ஆருயிர் நண்பன். பல நாட்களுக்குமுன் என் சட்டை ஒன்றை அவனிடம் நான் கொடுத்தேன். அதை வாங்கிப் போக வந்தேன்,'' என்றான்.

அவனது மனைவியும் ''அவர் வீட்டில் இல்லையே!'' எனவே, தலைமைப் பிசாசும் ''பரவாயில்லை. என் சட்டை எது என்று எனக்குத் தெரியும். என் சட்டையை அவன் எங்கேயாவது சுருட்டிப் போட்டிருப்

பான். கொஞ்சம் தேடிப் பாருங்கள்!'' என்றது.

அவளும் எல்லா இடங்களிலும் தேடிப் பார்த்து முடிவில் பரண் மீது சுருட்டிப் போடப்பட்டிருந்த சட்டையை எடுத்து வந்து மாடு மேய்ப்பவன் போல வந்த பிசாசிடம் காட்டவே, அதுவும் ''இதுதான் என் சட்டை. பஞ்சோக் வந்ததும் அவனிடம் இதை எடுத்துக் கொண்டு போனதாகச் சொல்லுங்கள்,'' எனக் கூறி அந்தச் சட்டையை வாங்கிக் கொண்டு போயிற்று.

அது சதின்கிரி பிசாசைக் கண்டு ''நீ வரம்பு மீறி நடந்ததால் இப்படி நடந்தது. அடுத்த முறை இப்படி நடந்தால் உன்னைத் தண்டிப்பேன்,'' என எச்சரித்து அனுப்பியது.

இரவில் வீடு திரும்பிய பஞ்சோக் தான் பரணில் வைத்திருந்த சட்டை அங்கே இல்லாததுகண்டு திகைத்து நின்றான். உடனே அவன் தன் மனைவியைக் கூப்பிட்டு அவளிடம் ''இங்கே ஒரு சட்டையைச் சுருட்டி வைத்திருந்தேனே. அதை நீ எடுத்தாயா?'' என்று கேட்டான்.

அவளும், ''நான் எடுக்கவில்லை. இன்று காலையில் உங்கள் உயிர் நண்பர் எனக் கூறிக் கொண்டு வந்தார். அவர் சில நாட்களுக்குமுன் தம் சட்டையை இங்கே விட்டுவிட்டுப் போனாராம். அவர் வீடு முழுவதும் தேடிவிட்டு முடிவில் பரண் மீதிருந்த மூட்டையை எடுத்து அதிலிருந்த சட்டையைக்காட்டி அதுதான் தன்னுடையது எனச் சொல்லி எடுத்துக் கொண்டு போய்விட்டார்,'' என்றாள்.

பிசாசின் சட்டையை யாரோ வந்து வாங்கிக் கொண்டு போய்விட்டான் எனத் தெரிந்ததும் இடிந்துபோய் உட்கார்ந்துவிட்டான். இனிமேல் எல்லா வேலைகளையும் அவன் தானே செய்தாக வேண்டும்!



## பார்க்க வேண்டிய இடங்கள்

கவர்ச்சிகரமான இடம் இமாசலப் பிரதேசத்தின் குலு பள்ளத்தாக்கு. இதனை தேவதைகளின் பள்ளத்தாக்கு எனக் கூறுகிறார்கள். இதன் தலை நகரான சிம்லா சுற்றுலாப் பயணிகளும் மற்றவர்களும் பார்க்க வேண்டிய மற்றொரு இடமாகும். இவை போல இங்கு இன்னும் பல இடங்கள் பார்க்கத்தக்கவை. டல்ஹௌசி என்ற மலைவாசஸ்தலத்திற்கு மக்கள் திரண்டு செல்கிறார்கள்.

# நம் இந்தியா

*நம் நாடு சுதந்திரம் அடைந்து 55 ஆண்டுகளாகிறது. ஜனநாயகம் நம் நாட்டில் நிலைத்துள்ள போதிலும் கடந்த அரை நூற்றாண்டில் பல உயர்வு, தாழ்வுகளைக் கண்டுள்ளது. அவற்றில் சிலவற்றை இம்மாதத்தில் நினைவுபடுத்திக் கொள்வோம்.*

1. நம் தேசத் தந்தையான மகாத்மா காந்திஜீ 1948 ஜனவரி 30ல் சுட்டுக் கொல்லப்பட்டார். அந்த தேதிக்கு 10 நாட்களுக்கு முன்பு கூட அவரது உயிருக்கு ஆபத்து ஏற்பட்டது. அந்த நிகழ்ச்சி எது?
2. இந்திய ராணுவத்திற்கு 1949 ஜனவரி 15 ஒரு சிறப்பு நாள். அந்த சிறப்பு என்ன?
3. முதலாவது பொதுத் தேர்தல் 1951 அக்டோபரில் இருந்து 1952 பிப்ரவரி வரை நடந்தது. இத்தேர்தலில் எவ்வளவு கட்சிகள் போட்டியிட்டன?
4. நீண்டநேர வரவு-செலவு பட்ஜெட்களை நாடாளுமன்றங்களின் முன் வைத்த நிதி அமைச்சர் யார்? எத்தனை முறைகளில்? அவர் யார்?
5. கும்பமேளா முதல் தடவையால் மக்களின் நெரிசலால் பாதிக்கப்பட்டது. இது எப்போது நடந்தது? இதனால் இழப்பு எவ்வளவு?
6. நாட்டின் மிக உயர்ந்த விருதான 'பாரத ரத்ன' விருது முதலில் எப்போது யார் யாருக்கு அளிக்கப்பட்டது?
7. டில்லியில் 1951ல் நடைபெற்ற முதலாவது ஆசிய விளையாட்டுப் போட்டியில் இந்தியாவிற்கு தங்கப் பதக்கம் வென்று கொடுத்தவர் யார்? எந்த விளையாட்டில்?
8. இந்தியாவின் முதல் கார்டினல் யார்? அவர் எப்போது அப்பதவியில் அமர்த்தப்பட்டார்?
9. சமஸ்தானங்களின் மிகப்பெரிய இணையம் 1948ல் அமைக்கப்பட்டது. அதன் பெயர் என்ன? அதன் தலைநகரம் எது?
10. நம் நாட்டின் ஆன்மீகப் பெரியவர்கள் இருவர் 1950 ஏப்ரலிலும் டிசம்பரிலும் இயற்கை எய்தினர். அவர்கள் யார்?

*(விடைகள் அடுத்த இதழில்)*

## நவம்பர் வினாக்களின் விடைகள்

1. மகளுக்கு அவளுடைய தந்தை எழுதிய கடிதங்கள்.
2. ஆகஸ்ட் 14, 1947ல் நள்ளிரவு. நாடாளுமன்ற மத்தியக் கூடம். சுதந்திர நாடாகப் பிரகடனம் செய்ய.
3. விஜயலட்சுமி பண்டிட். ஐக்கிய மாகாணம் (தற்போதைய உத்திரப் பிரதேசம்).
4. தவறு.
5. வானர சேனை. தேசியத் தலைவர்களிடையே தகவல் பரிமாற்றத்திற்கான பணியைச் செய்தது.
6. இந்திய-பாகிஸ்தான் போரில் வெற்றி (டிசம்பர் 3 முதல் 16 வரை).



# விநாயகர்

அன்று சதுர்த்தி. இரவில் விநாயகர் வயிறு புடைக்க சாப்பிட்டுவிட்டு தொந்தியை அசைத்தவாறே தன் வாகனமாகிய மூஞ்சூறுடன் நடந்து சென்று கொண்டிருந்தார்.

ஆடி அசைந்து சென்று கொண்டிருந்த விநாயகர் சிறு கல் தடுக்கிப் பொத்தென விழுந்தார். அவருடைய தொந்தி வெடித்தது. அதிலிருந்து கொழுக்கட்டை, அப்பம் போன்றவை வெளியே சிதறின. அவரது வாகனமாக மூஞ்சூறு அவற்றைத் தின்னலாயிற்று.

வானில் சந்திரன் வேடிக்கையான இக்காட்சியை கண்டு பலமாகச் சிரித்தான். அப்போது தேவர்கள் ஓடி வந்து கிழிந்துபோன விநாயகரின் வயிற்றைத் தைத்தார்கள்.

தன் மகனைக் கண்டு சிரித்த சந்திரன் மீது பார்வதி தேவி கோபம் கொண்டு "விநாய சதுர்த்தியன்று சந்திரனைப் பார்ப்பவர்கள் வீண் அபவாதத்திற்கு ஆளாகட்டும்," எனச் சபித்தாள். அப்போது முதல் விநாயக சதுர்த்தியன்று சந்திரனைப் பார்க்கக் கூடாது என முதியவர்கள் மற்றவர்களிடம் சொல்லி வரலாயினர்.

துவாபர யுகத்தில் விஷ்ணு பகவான் தேவகிக்கும் வசுதேவருக்கும் கிருஷ்ணன் என்ற பெயரில் மகனாகப் பிறந்து கோகுலத்தில் யசோதையிடம் வளர்ந்து வந்தார்.

அந்த ஆண்டு விநாயக சதுர்த்தியன்று மாலை வேளையில் யசோதை பால் கறந்து கொண்டிருக்க, கிருஷ்ணர் யசோதையின் முதுகைக் கட்டிக்




கொண்டு பால் கிண்ணத்தில் பிரதி பலித்த நான்காம்பிறைச் சந்திரனைப் பார்த்து, ''ஆகா! அம்புலிமாமா! பாலில் அம்புலி!'' என்று உரக்கக் கூறிச் சிரித்தார்.

யசோதை சட்டென ''ஐயோ! நீ இனி எப்படிப்பட்ட வீண் அபவாதங் களுக்கு ஆளாகப் போகிறாயோ?'' என்று கவலைப்பட்டாள். கிருஷ் ணரோ ''கவலைப்படாதே, அம்மா! நான் அவ்வப்போது வெண்ணெய், பால், தயிர் போன்றவற்றைத் திருடிச் சாப்பிடுகிறேன், அல்லவா? அதற் காக எல்லோரும் என்னைத் திருடன் என்று கூறி அபவாதம் சுமத்துவார் கள். அவ்வளவுதான்,'' என்றார்.

யசோதை, ''அடேயப்பா! என்ன வாய் உனக்கு! எதைச் சொன்னாலும் ஏதோ ஒரு சமாதானம் சொல்லிவிடுகி றாய். உலகமே உன் வாய்க்குள் அடக் கம் போலிருக்கிறதே!'' என்றாள்.

அதற்குக் கிருஷ்ணர் ''இந்த உலகம் என்ன, அண்ட சராசரங்கள் எல்லாமே உள்ளன. இல்லாததும் பொல்லாத தும் நல்லவர்களைப் பற்றிக் கூட சொல்வார்கள். அதைப் பொருட் படுத்த வேண்டாம்,'' என்றார்.

மறுநாள் யசோதை ஏதோ வேலை யாக இருக்கும்போது பலராமன் ஓடிவந்து, ''அம்மா! அம்மா!! கிருஷ்ணன் மண்ணைத் தின்கிறான். போய்ப் பார்!'' என்றான் கோள் மூட்டியவாறே.

யசோதை சென்று பார்த்தபோது கிருஷ்ணரின் முன் மண் உருண்டை கள் இருந்தன. உடனே அவள், ''ஏய் கிருஷ்ணா! மண்ணைத் தின்கிறாயா? எங்கே வாயைத் திறந்து காட்டு பார்க் கலாம்!'' எனக் கூறி அவனை இலேசா கக் கிள்ளினாள்.

அவரோ, ''அம்மா! நீ விநாயக சதுர்த்தியன்று விநாயகரைப் போல களிமண்ணால் உருவம் செய்து பூஜை செய்கிறாய். களிமண் பிள்ளையார் கடவுள் என்றால் நான் பிடித்த இந்த மண் உருண்டைகள் லட்டும் மோதக மும் தானே?'' என்று கேட்டார்.

யசோதையும் ''தப்பு! தப்பு!! கட வுளைக் களிமண் என்றெல்லாம் சொல்லக் கூடாது. அபசாரம்,'' என்றாள். கிருஷ்ணரோ ''அம்மா! உருவத்தில் என்ன இருக்கிறது? கல் லாயிருந்தாலும் மண்ணாக இருந்தா லும் மனதில் நாம் எதைக் கடவுள் என நினைத்துப் பூசிக்கிறோமோ அது தான் கடவுள். அந்தரங்க சுத்தியுடன் அவரை நினைத்தால் போதும். அவர்

தான் எந்தப் பொருளிலும் இருக்கிறாரே!'' என்றார்.

யசோதையும் ''அதெல்லாம் கிடக்கட்டும். முதலில் உன் வாயைத் திற! மண்ணா சாப்பிட்டாய்?'' என்று கோபத்தோடு கேட்டாள். கிருஷ்ணரும் ''சரி, நீயே பார்!'' என்று கூறி வாயைத் திறந்து காட்டினார்.

யசோதை கிருஷ்ணரின் வாயில் எல்லா ஜீவராசிகளையும் எல்லா உலகங்களையும் கண்டு திகைத்துப் போனாள். அதில் தானும் கிருஷ்ணரும் கூட இருப்பது கண்டு 'இதென்ன ஆச்சரியம்?' என்று திகைத்தாள். அதில் கிருஷ்ணர் தன் குழலை எடுத்து ஊத விநாயகரே அதற்கு ஏற்ப நடனம் புரிவதைக் கண்டு மயக்கமே போட்டு விழுந்துவிட்டாள்.

மீண்டும் அவள் மயக்கம் தெளிந்து எழுந்தபோது தன்னைச் சுற்றிலும் ஆயர்குலப் பெண்களும் முதியோர்களும் சூழ்ந்து இருக்கக் கண்டாள். அவர்கள் ''இதென்ன அநியாயம்? உன் மகன் கிருஷ்ணன் எங்கள் வீடுகளில் புகுந்து வெண்ணெய், தயிரெல்லாம் எடுத்து தானும் உண்டு தன் சிநேகிதர்களுக்கும் குரங்குகளுக்கும் கொடுத்துவிட்டானே. நீ கண்டிக்கக் கூடாதா அவனை?'' என்று சொல்லி அவர்களை அனுப்பினாள். கிருஷ்ணர் மெதுவாக வந்து ''என்னம்மா விஷயம்? இவர்கள் எல்லாம் என்ன சொல்லிவிட்டுப் போகிறார்கள்?'' என்று கேட்டார்.

யசோதையும் ''உன் மீது ஒரே குற்றச்சாட்டுகள். நீ அவர்கள் வீட்டு



வெண்ணெய், தயிர், பால் எல்லாம் திருடினாயாம். வீண் அபவாதத்திற்கு நீ ஆளாகிறாய், பார்!'' என்றாள்.

கிருஷ்ணரும் ''வீண் அபவாதம் இல்லையம்மா. அவர்கள் சொன்னது எல்லாம் உண்மையே,'' என்றார். அதுகேட்டு யசோதை கோபம் கொண்டு கிருஷ்ணரை ஓர் உரலில் கயிறால் கட்டிப் போட்டுவிட்டுப் போய்விட்டாள்.

கிருஷ்ணரோ தவழ்ந்தவாறே அந்த உரலை உருட்டி இழுத்துக் கொண்டே போனார். அந்த உரல் அடுத்த வீட்டு வாசலில் இருந்த இரு மரங்களுக்கு இடையே அகப்பட்டுக் கொண்டது. கிருஷ்ணர் பலமாக இழுக்கவே அந்த மரங்கள் ஒடிந்து விழுந்தன. அதிலிருந்து இரு கந்தர்வர்கள் வெளிவந்து கிருஷ்ணரை வணங்கித் தாம் சாபவிமோசனம் பெற்றதாகக் கூறி வணங்கி, பிறகு



ஆகாயத்தில் சென்று மறைந்தார்கள்.

ஓராண்டு கழிந்தது. மீண்டும் விநாயக சதுர்த்தி வந்தது. யசோதை மோதகங்களையும் கொழுக்கட்டைகளையும் அப்பங்களையும் வார்த்து எடுத்துத் தட்டுகளில் வைத்து பூஜை அறையில் விநாயகரின் விக்கிரகத்தின் முன் வைத்துவிட்டு அறைக் கதவை மூடிக் கொண்டு வேறு ஏதோ வேலையை கவனிக்கச் சென்றாள்.

கிருஷ்ணர் மெதுவாகப் போய் பூஜை அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றார். கதவை மூடிக் கொண்டு விநாயகரின் விக்கிரகத்தின் முன் உட்கார்ந்து அவர் தட்டில் இருந்தவற்றை ஒவ்வொன்றாக எடுத்து விநாயகரிடம் கொடுத்து ''சாப்பிடுங்கள்'' என்று அந்த விக்கிரகத்தின் தொந்தியைத் தடவிக் கொடுத்தார்.

விக்கிரகத்தின் விநாயகர் வெளி வந்து ''கிருஷ்ணா! நான் கொடுப்பதையும் நீ சாப்பிட வேண்டும், தெரியுமா?'' என்றார். கிருஷ்ணரும் தலையை ஆட்டவே, இருவருமாக அங்கிருந்த தட்டுகளில் இருந்த வற்றை எல்லாம் எடுத்துச் சாப்பிட்டு விட்டார்கள்.

இதற்குள் பூஜை அறைக்கு வந்த யசோதை ஜன்னல் வழியாக உள்ளே நடப்பதைப் பார்த்துத் திகைத்துப் போனாள். அவள் தான் காண்பது கனவோ எனச் சந்தேகப்பட்டு பூஜை அறையின் கதவைத் திறந்து கொண்டு உள்ளே சென்றாள்.

விநாயக விக்கிரகம் ஆடாமல் அசையாமல் இருந்தது. ஆனால் தட்டில் வைக்கப்பட்ட மோதகங்கள், கொழுக்கட்டைகள், அப்பங்கள் ஆகியவற்றைத்தான் காணவில்லை. கிருஷ்ணர் மட்டும் திருட்டு முழி முழித்துக் கொண்டிருந்தார்.

யசோதை கோபத்தோடு ''என்ன இது? சுவாமிக்கு நைவேத்தியம் செய்ய வைத்திருந்ததை எல்லாம் எடுத்துச் சாப்பிட்டுவிட்டாயா?'' என்று கூறி முதுகில் நான்கு அடிகளைக் கொடுத்து விரட்டினாள்.

கிருஷ்ணர் நேராகக் காளிந்தி மடுவிற்கு ஓடினார். கிருஷ்ணர் ஓடுவதைக் கண்ட கோகுலவாசிகள் எல்லோரும் அவர் பின்னாலேயே ஓடினார்கள். யசோதையும் அவர்களோடு சென்றாள்.

காளிந்தி மடுவில் தன் குடும்பத்தோடு இருந்த காளிந்தன் என்ற விஷப்பாம்பு கோகுலவாசிகளையே

அதிர அடித்து வந்தான். யாருமே காளிந்தி மடுவின் பக்கம் போக மாட்டார்கள்.

கிருஷ்ணர் சட்டென அந்த மடுவில் குதிக்கவே காளிந்தன் கோபத்தோடு சீறி தன் ஐந்து தலைகளையும் படமாக எடுத்தான். கிருஷ்ணரோ அத்தலைகளின் மீது நின்று நடனம் ஆடி அவனது விஷத்தை எல்லாம் க்க்க வைத்தார். காளிந்தனும் சாபம் நீங்கியவனாகத் தன் குடும்பத்தவரோடு பாதாள லோகத்திற்குப் போய் விட்டான். இவ்வாறாக கோகுலவாசிகளுக்கு காளிந்தனால் ஏற்பட்ட பயம் ஒழிந்தது.

யசோதை மடுவிலிருந்து வீடு திரும்பி வந்து பூஜை அறைக்குள் சென்றபோது தட்டுகளில் மோதகம், கொழுக்கட்டை, அப்பம் முதலியன நிறைய இருப்பது கண்டு திகைத்துப் போனாள். அவள் ''அடடா! நான் வீணாகக் கிருஷ்ணனைக் கோபித்துக் கொண்டு கண்மூடித்தனமாக அடித்து விட்டேனே!'' என மிகவும் மனம் வருந்தினாள்.

அப்போது கிருஷ்ணர் ''அம்மா! பூஜையைச் செய்துமுடி. எனக்கு மோதகமும் கொழுக்கட்டையையும் பிரசாதமாகக் கொடு'' என்றார். யசோதையும் அவ்வாறே செய்து கிருஷ்ணனுக்கும் கோகுலவாசிகளுக்கும் அந்தப் பிரசாதத்தைக் கொடுத்தாள்.



அது எல்லோருக்கும் அமிர்தம் போல இருந்தது.

கிருஷ்ணர் வளர்ந்து பலசாலியாக விளங்கினார். கோவர்த்தன மலையையே தன் கை விரலால் தூக்கி கோகுலவாசிகளையும் ஆடு மாடுகளையும் கடும் மழையிலிருந்து காப்பாற்றினார். இந்திரன் வேண்டுமென்றே பெய்வித்த மழை அது. ஆனால் அவன் எதுவும் செய்ய முடியாது போய் அவமானப்பட்டான். ஒருநாள் கிருஷ்ணர் ஆடு மாடுகளை மேய்த்துக் கொண்டிருக்கும்போது ஒரு பெரியவர் ஒரு மத்தளத்தோடு அங்கு வந்தார்.

அவர் ''கிருஷ்ணர் என்று ஒருவர் இருக்கிறாராமே! வெகுநன்றாகப் புல்லாங்குழல் வாசிப்பாராமே. அவர் குழல் ஊதி இசைக்க நான் கேட்க வேண்டும். அவரை எங்கே பார்க்கலாம்?'' என்று கேட்டார்.

கிருஷ்ணரும் ''நான்தான் அந்தக் கிருஷ்ணன். உங்களைப் பார்த்தால் ஒரு மிருதங்க வித்வான் போலத் தெரிகிறதே!'' எனப் பணிவுடன் விசாரித்தார். வந்த பெரியவரும் ''ஆமாம். என் ஊர் மதுரைக்கும் தெற்கே உள்ளது. இப்போது மதுராபுரியை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறேன். அங்கு கம்சன் தனுர் யாகம் செய்கிறானாம். அங்கு என் மிருதங்க வாசிப்பைக் காட்டலாம் என எண்ணியே செல்கிறேன்,'' என்று கூறினார். அவருடைய உடலில் காது, கை, கழுத்து, இடுப்பு ஆகியவற்றில் ஒரே தங்க ஆபரணங்களாக இருந்தன. அவரது மிருதங்கத்திலும் கூட நவரத்தினங்கள் பதிக்கப்பட்டிருந்தன.

கிருஷ்ணர் அப்போது ''ஐயா பெரியவரே! நான் ஏதோ மாடு மேய்க்கும்போது குழலை ஊதுவேன். முறையாக சங்கீதம் பயின்றவன் அல்ல. நீங்கள் எல்லாம் தாளம் தவறாமல் இசையை அனுபவிப்பவர்கள் என்பது பிரசித்தமாயிற்றே. நான் ஏதோ ஒரு ராகத்தை என் இஷ்டத்திற்குக் குழலில் இசைக்கிறேன். இந்த இசை யையா நீங்கள் கேட்க வேண்டும் என்று ஆசைப்பட்டு என்னைத் தேடி இங்கு வந்திருக்கிறீர்கள்?'' என்றார்.

*(தொடரும்)*





# புரிந்து கொண்டோம்!

சிங்கனூரில் வேணு என்றும் சீனு என்றும் அண்ணன் தம்பிகள் இருந்தார்கள். அவர்களிடையே தம் பூர்வீக சொத்தைப் பிரித்துக் கொள்வதில் அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. அவர்களுக்கு உடன்பாடு செய்து வைப்பதாகக் கூறிக் கொண்டு வந்த ஊர்ப் பிரமுகர்களும் இரு பிரிவுகளாகி தாம் சொல்கிறபடி தான் பாகப் பிரிவினை செய்ய வேண்டும் என்று வாதம் புரியலானார்கள். இது சகோதரர்கள் இருவருக்கும் பெரிய தலைவலியாகப் போய்விட்டது.

இதற்கு எப்படி முடிவு காண்பது என்று அந்த இரு சகோதரர்களும் யோசித்துக் கொண்டிருக்கையில் ஊர் ஊராகப் போய் வியாபாரம் செய்யும் உலகநாதன் அவர்களைப் பார்க்க வந்தான். அவர்கள் தம் பிரச்சினையைக் கூறவே, "நீங்கள் இப்போதே மேலக்காடு என்ற ஊருக்குப் போய் அங்குள்ள பெரியண்ணன் என்பவனைப் பாருங்கள். அவன் இதற்குச் சரியான வழியைக் கூறுவான்," என்று சொன்னான்.

வேணுவும் சீனுவும் அன்றைய தினமே மேலக்காட்டிற்குச் சென்றார்கள். அவர்கள் உச்சிவேளைக்கு அந்த ஊரை அடைந்தார்கள். அங்கு அவர்கள் முதலில் கண்ட ஒரு விவசாயியிடம், "இந்த ஊரில் பெரியண்ணனின் வீடு எங்கே இருக்கிறது?" என்று கேட்டார்கள். அவனோ, "அந்த செவிடனிடம் உங்களுக்கு என்ன வேலை? சரி, சரி. நேராகப் போங்கள்!" என்று கூறி அனுப்பினான்.

அதைக் கேட்டு ஆச்சரியப்பட்ட அவர்கள் சற்று தூரம் போய் அங்கு நின்றிருந்த ஒரு பெண்மணியிடம், "அம்மா! இங்கே பெரியண்ணனின் வீடு எங்கே இருக்கிறது?" என்று கேட்டார்கள். அவளும், "அந்தக் குருடரையா பார்க்கப் போகிறீர்கள்? சரி, சரி. அதோ அந்தத் தென்னந்தோப்பின்

- சிவனார் செல்வன் -



பக்கத்தில்தான் இருக்கிறது, போங் கள்!'' என்று சொல்லி அனுப்பினாள்.

தென்னந்தோப்பின் பக்கம் போன போது அவர்கள் ஒரு பெண்ணைப் பார்த்ததும் அவளிடம், ''பெரியண் ணனின் வீடு எங்கே இருக்கிறது?'' என்று கேட்டார்கள்.

அவளோ, ''அந்த ஊமையைப் பார்க்கவா போகிறீர்கள்? அதோ அந்த வீடுதான்,'' என்று ஒரு வீட்டைச் சுட்டிக் காட்டினாள். அவர்களும் அந்த வீட்டிற்குப் போய், ''பெரியண் ணன் இருக்கிறாரா?'' என்று கதவைத் தட்டிக் கேட்டார்கள்.

கதவைத் திறந்து கொண்டு வந் தவர் ''நான்தான் பெரியண்ணன், வாருங்கள்! திண்ணையில் உட்காருங் கள். யார் நீங்கள்? என்ன விஷயம்?'' என்று கூறி உட்கார்ந்தான். வேணுவும் சீனுவும் அவனைப் பார்த்துத் திகைத் தார்கள். ஏனெனில் பெரியண்ணன் ஊமை இல்லை, குருடன் இல்லை, செவிடன் இல்லை என்பது அவர் களுக்குத் தெரிந்து போயிற்று.

அவர்கள் அவனிடம், ''ஒரு விவ சாயி உங்களைச் செவிடன் என்றான். ஒரு பெண்மணி உங்களைக் குருடன் என்று கூறினாள். இன்னொரு பெண் மணி உங்களை ஊமை என்று சொன் னாள். அவர்கள் கூறியபடி நீங்கள் இல்லையே. பிறகு ஏன் அவர்கள் அப்படிச் சொன்னார்கள்? இதை முதலில் சொல்லுங்கள். பிறகு எங்கள் விஷயத்திற்கு வரலாம்,'' என்றார்கள்.

பெரியண்ணனும், ''இவ்வூர் விவ சாயிகள் இந்த ஊர்க்குளத்தை இப் போதே தூர் வார வேண்டும் என்று வற்புறுத்துகிறார்கள். நானோ இது சரியான சமயம் அல்ல. இன்னும் இரண்டு மாதம் கழிந்ததும் செய்

யுங்கள் என்றேன். அவர்களும் தின மும் என்னிடம் சொல்லிச் சொல்லிப் பார்க்கிறார்கள். அதை நான் கேளாத தால் அந்த விவசாயி என்னைச் செவி டன் எனச் சொல்லி இருக்கிறான். என்னைக் குருடன் என்று சொன் னவள் என் மனைவியே. என் வீட்டுக் கூரையில் பல ஓடுகள் ஒடிந்து விழுந்துவிட்டன. அதனால் மழை யின்போது வீடு முழுவதும் ஒழுகிக் கொண்டிருக்கிறது. அதைப் பார்த்தும் ஓடு மாற்றாமல் நான் இருப்பதால் அவள் என்னைக் குருடன் என்று சொல்லி இருக்கிறாள். அடுத்து என்னை ஊமை என்று ஒருத்தி சொன் னாள் அல்லவா? ஏனென்றால் இந்த ஊரில் சில கணவன்கள் தம் மனைவி களைக் கொடுமைப்படுத்துகிறார்கள். அந்த மனைவிகளெல்லாம் என் னிடம் வந்து தம் கணவன்மார்களுக்கு அறிவுரை கூறுமாறு சொல்லி வரு கிறார்கள். அந்தக் கணவன்களோ முர டர்கள். அதனால் நான் எதுவும் பேச முடியாத நிலையில் இருக்கிறேன். அதனால் தான் அவள் என்னை ஊமை எனக் கூறினாள்,'' எனக் கூறினான்.

அப்போது வேணுவும் சீனுவும், ''எங்கள் ஊருக்கு வந்த உலகநாதன் எங்கள் சொத்தைப் பிரித்துக் கொள்ள உங்களிடம் யோசனை கேட்கும்படி ஏன் அனுப்பினார்? ஒன்றும் புரிய வில்லையே!'' என்றார்கள்.

பெரியண்ணனும், ''நான் நியாய மாக தீர்ப்பு கூறினாலும் பலர் சுய நலம், அகம்பாவம், அறியாமையால் ஏற்க மறுக்கிறார்கள். தூர் வார, வீட்டுக் கூரை மாற்ற இது சரியான காலம் அல்ல. இது அவர்களுக்குப் புரியவில்லை. கணவன்-மனைவி யின் சண்டை சச்சரவு இயல்பே. இதை அவர்களே தீர்க்க வேண்டும். இது தானே சரியாகிவிடும். இதில் மூன்றாவது பேர்வழி தலையிடக் கூடாது. அப்படித் தலையிட்டாலும் பலன் ஏற்படாது,'' என்றான்.

அதைக் கேட்டு சகோதரர்கள் இரு வரும் பெரியண்ணனை வணங்கி, ''இப்போது புரிந்து கொண்டோம். பிறர் உதவி இன்றி எங்கள் பூர்வீக சொத்தை நாங்களே பிரித்துக் கொள் கிறோம்,'' எனக் கூறிவிட்டுத் தம் ஊருக்குச் சென்றார்கள்.





# நீயும் ஜமீன்தாரரே!

முத்தூரில் முத்தப்பர் என்ற பணக்காரர் இருந்து வந்தார். அவர் யார் எதை எப்போது கேட்டாலும் உடனேயே உதவி வந்ததால் எல்லோரும், ''இவர் தான் நம் உண்மையான ஜமீன்தாரர். இன்னொரு ஜமீன்தாரர் நம்மிடமிருந்து வரி வசூல் செய்யும் ஜமீன் தாரர்தான்,'' எனக் கூறி வந்தார்கள். நாளடைவில் மக்கள் முத்தப்பரை ஜமீன்தாரர் என்றே கூறிப் புகழ்ந்து வந்தார்கள்.

முத்தூரில் ஜமீன்தாரர் என்று ஒருவர் அழைக்கப்படுகிறார் என்பதைக் கேட்ட அந்த ஜமீனின் ஜமீன்தாரரான வீரப்பிரதாபர் கோபமும் ஆத்திரமும் கொண்டார். அவர் முத்தப்பரைப் பற்றி விசாரித்ததில் அவருக்கு மணமாகவில்லை என்றும் உற்றார் உறவினர் என்று யாரும் இல்லை என்றும் தெரிய வந்தது.

அவர் தம் திவானை அழைத்து ''நம் ஜமீனில் என்னைத் தவிர இன்னொரு ஜமீன்தாரர் இருக்கிறாராமே! உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டார். திவானும், ''ஐயா! மக்கள் சிலர் ஒருவரைக் கடவுளாகக் கருதி மரியாதை செய்வதால் அந்த மனிதரே கடவுள் என்றாகிவிடாது. இதுபோல தாராள மனப்பான்மையும், தான குணமும் கொண்ட முத்தப்பரை அப்பகுதி மக்கள் ஜமீன்தாரர் என்று பாராட்டிப் புகழ்கின்றனர். ஜமீன்தாரரின் பெருந்தன்மை வம்ச பரம்பரையாய் பிறப்பால் வருவது. இந்த முத்தப்பருக்கு மனைவி-மக்கள், உற்றார்-உறவினர் என்று யாருமில்லை. அதனால் பணத்தின் அருமை தெரியாமல் கொடுத்து விடுகிறார். அவருக்குத் திருமணமாகி விட்டால் இவ்வாறு தான தர்மங்கள் செய்ய மாட்டார். அதனால் அவரைப்

- கௌரிநாதன் -

பற்றிக் கவலைப்பட வேண்டாம்,'' என்றார்.

இப்படி இருக்கையில் முத்தூரின் கிராம அதிகாரி திடீரென மாரடைப்பால் இறந்து போனார். அதனால் புதிய அதிகாரியை நியமிக்க ஜமீன்தாரர் தம் திவானிடம், ''முத்தப்பரை முத்தூரின் கிராம அதிகாரியாக நியமித்துவிடுங்கள். அதனால் மக்கள் இனிமேல் அவரை ஜமீன்தாரர் என்று குறிப்பிடாமல் கிராம அதிகாரி என்று கூறுவார்கள். இதனால் இரு ஜமீன்தாரர்கள் என்ற பிரச்சினைக்கு ஒரு முடிவு ஏற்பட்டுவிடும்,'' என்றார்.

திவானும் உடனே முத்தூருக்குப் போய் முத்தப்பர் அவ்வூரின் கிராம அதிகாரியாக நியமிக்கப்பட்டிருக்கிறார் என அறிவித்தார். அப்பகுதி மக்களும் அதுகேட்டு மகிழ்ந்தனர். ஆனால் முத்தப்பர் கிராம அதிகாரியானபோதிலும் மக்கள் அவரை முன்போல ஜமீன்தாரர் என்றே கூறி வந்தனர். அதை திவான் அறிந்திருந்தும் தம் ஜமீன்தாரரிடம் அந்த விஷயத்தைத் தெரிவிக்கவில்லை.

ஒரு வருடம் கழிந்தது. வரி வசூலாகி ஜமீன் பொக்கிஷத்தில் எல்லா கிராம அதிகாரிகளும் சேர்த்துவிட வேண்டும். முத்தூர் கிராம அதிகாரியான முத்தப்பர் இன்னமும் வசூலாகாத வரிப் பணத்தைத் தம் கைப்பணத்திலிருந்து எடுத்துப் போட்டு அந்த ஆண்டில் முத்தூர் செலுத்த வேண்டிய முழு வரிப் பணத்தையும் பொக்கிஷத்தில் சேர்த்துவிட்டு ரசீது பெற்று வருமாறு தன் கீழ் பணிபுரியும்



வேலையாள் ஒருவனை ஜமீனின் தலைநகருக்கு அனுப்பினார்.

தலைநகரில் பொக்கிஷ அலுவலகத்தில் எல்லா கிராம அதிகாரிகளும் வரி செலுத்த வந்திருந்ததால் கூட்டமாக இருந்தது. முத்தூரின் கிராம அதிகாரி அனுப்பிய பணியாள் செய்வதறியாது திகைத்து நிற்கையில் அங்கு வந்த திவான் அவனைப் பார்த்து, ''நீ முத்தூர் கிராம அதிகாரி அனுப்பிய பணியாள் தானே? வரிப் பணம் கட்டவா வந்திருக்கிறாய்?'' என்று கேட்க, அவனும் ''ஆம். முழுத் தொகையான எண்ணூறு ரூபாயையும் கொண்டு வந்திருக்கிறேன். அதைக் கட்டிவிட்டு எப்படி ரசீது வாங்கிக் கொண்டுபோவது என்று தெரியாமல் திகைக்கிறேன்,'' என்றான்.



திவானும், ''சரி, வா! பணத்திற்கான ரசீதை முதலில் வாங்கிக் கொடுக்கிறேன். பிறகு பொக்கிஷ அறைக்குச் சென்று பணத்தைக் கொடுத்துவிட்டுப் போ!'' என்று கூறி, அவனை பொக்கிஷ அலுவலகத்துள் அழைத்துப் போய் அங்குள்ள அதிகாரியிடம் முதலில் முத்தூர் கிராம வரியான எண்ணூறு ரூபாய்க்கு ரசீதைப் போட்டுக் கொடுக்கச் சொன்னார்.

அதன்படியே அந்த அதிகாரியும் முத்தூர் கிராம அதிகாரியிடமிருந்து முழு வரிப் பணத்தைப் பெற்றதாக ரசீது எழுதிக் கொடுத்தார். திவான் முத்தூர் பணியாளிடம், ''இனி நீ பணத்தை பொக்கிஷத்தில் சேர்த்துவிட்டுப் போ!'' என்று கூறி ரசீதையும் பணத்தையும் கொடுத்தனுப்பினார்.

அந்தப் பணியாள் பொக்கிஷத்தை அடையும்போது வேலை நேரம் முடிந்துவிட வரிப்பணம் வாங்குவது நிறுத்தப்பட்டது. முத்தூர் பணியாள் என்ன செய்வது என்று தெரியாமல் முத்தூருக்குத் திரும்பிவந்து ரசீதையும் பணத்தையும் முத்தப்பரிடம் கொடுத்து தலைநகரில் நடந்ததைக் கூறினான். முத்தப்பரும் அவற்றைப் பத்திரமாக வைத்துக் கொண்டார்.

கிராமப் பெண்மணிகள் குடிக்கவும் சமையலுக்கும் தண்ணீர் எடுத்து வர முத்தூரிலிருந்து மூன்று மைல் தூரம் போய்வருவதை முத்தப்பர் கண்டார். அதனால் தன் கிராமத்தில் ஒரு சிறு குளம் வெட்டினால் குடிநீர்ப் பிரச்சினையைத் தீர்க்கலாமே என்று அவர் எண்ணினார். உடனே நீர் ஊற்றுள்ள இடத்தைக் கண்டு கூறும் நிபுணரை அவர் வரவழைத்தார். அந்த

நிபுணரும் ஓரிடத்தைக் காட்டி அங்கு நீர் ஊற்று உள்ளது எனக் கூறினார். அந்த நிலம் முத்தப்பருடையதே. அதில் குளம் வெட்டும் வேலை ஆரம்பிக்கப்பட்டது. பொக்கிஷத்தில் கட்டப்படாமல் கொண்டுவரப்பட்ட எண்ணூறு ரூபாய் அதற்காகச் செல விடப்பட்டது. குளம் வெட்டப் பட்டு அந்த வேலை முடிவுற்றது. மக்கள் அந்தக் குளத்தை ஜமீன்தாரர் குளம் என்றே கூறலானார்கள்.

இந்த விஷயம் தலைநகரிலுள்ள ஜமீன்தாரருக்குத் தெரிய வந்தது. தாம் முத்தூரில் குளம் வெட்டும்படி அனுமதிக்கவில்லையே என எண்ணி அவர் ஆச்சரியப்பட்டார். அவர் திவானிடம் அதுபற்றிக் கேட்கவே, அவரும் முத்தூர் கணக்கில் வரி வரவு பற்றி ஆய்வு நடத்தினார்.

அப்போது பொக்கிஷத்தில் எண் ணூறு ரூபாய் செலுத்தப்படாததும், ஆனால் அதற்கான ரசீது மட்டும் கொடுக்கப்பட்டதும் தெரிய வந்தது. உடனே ஜமீன்தாரர் முத்தூருக்குப் போய் கிராம அதிகாரியான முத்தப் பரிடம் விளக்கம் கேட்டார்.

முத்தப்பரும் நடந்ததைக் கூறி தாம் பத்திரமாக வைத்திருந்த ரசீதைக் காட்டினார். பிறகு அவர் ''இதை ஜமீன்தாரர் குளம் என்று கூறுவதில் எவ்வித ஆட்சேபணையும் இல்லை. ஏனெனில் இதற்குச் செலவான பணம் ஜமீன்தாரராகிய தங்களுடை யதே. குளம் என் நிலத்தில் வெட்டப் பட்டிருந்தாலும் அது தங்களுக்கு உரிமையானதே. எப்போது வேண்டு மானாலும் அதை என்னிடமிருந்து நீங்கள் எடுத்துக் கொள்ள முடியும். ஊரார் நான் வெட்டியதால் ஜமீன்தாரர் குளம் என்று கூறி என்னைப் புகழ்ந் தாலும் இதன் பெருமையும் பேரும் தங்களுக்குத் தான்,'' என்றார்.

கிராம மக்கள் அந்தக் குளத்தால் பயனடைந்தது கண்டு ஜமீன்தாரர், ''முத்தப்பரே! நீங்கள் தாம் உண்மை யில் ஜமீன்தாரர். எனவே இப்பகுதி முழுவதையும் உங்களுக்கே கொடுக் கிறேன். இனி நீங்களும் ஜமீன்தாரரே. இந்தக் குளமும் உங்கள் பெயரில் தான் இருக்கும்,'' என்றார். அந்த அறி விப்பை அப்பகுதி மக்கள் மகிழ்ச்சி யுடன் வரவேற்றனர்.





# தானம் தொடர்ந்தது

தேவகிரி என்ற நாட்டில் அன்ன தானம் அய்யாசாமி என்பவர் இருந்தார். அவர் தினமும் ஏழை எளியவர்களுக்கும் மற்றவர்களுக்கும் உணவளித்து வந்ததால் அவருக்கு அப்பெயர் ஏற்பட்டது. இதைக் கேள்விப்பட்ட அந்நாட்டு மன்னன் அவருக்குப் பொருள் கொடுத்து உதவினான்.

அய்யாசாமியின் மனைவி அன்னம்மாளும் தன் கணவனுக்கு ஏற்ற விதமாக நடந்து வந்தாள். யார் எப்போது தன் வீட்டிற்கு வந்தாலும் தனக்கென வைத்திருந்த உணவைக் கூட அவர்களுக்கு அளித்து உபசரித்து அனுப்புவாள். எனவே அத்தம்பதிகளின் புகழ் நாடெங்கிலும் பரவி இருந்தது.

ஒருமுறை அந்நாட்டு மன்னன் புனித யாத்திரையை மேற்கொண்டு காசியை அடைந்தான். எல்லோரும் கங்கையில் ஸ்நானம் செய்துவிட்டு கரைக்கு வந்து கொண்டிருந்தபோது ஒரு சில வீரர்கள் ''மன்னர் வருகிறார், வழிவிட்டு விலகி நில்லுங்கள்!'' என கூறிக் கொண்டு வந்தார்கள். அவர்கள் மக்கள் கூட்டத்தைத் தள்ளி நிற்க வைத்தனர். அக்கூட்டத்தில் தேவகிரி மன்னனும் ஒருவன்.

இச்செயலால் கோபம் கொண்ட தேவகிரி மன்னனின் வீரர்கள் கத்த, அதைக் கேட்ட காசி மன்னன் தன் குதிரையிலிருந்து இறங்கி தேவகிரி மன்னனை வணங்கி, ''அன்னதான அய்யாசாமி வாழும் புனித நாட்டின் மன்னர் தாங்கள் என்பது என் வீரர்களுக்குத் தெரியாது. தங்களுக்கு இழைக்கப்பட்ட அபசாரத்திற்கு நான் மன்னிப்பு கோருகிறேன்,'' என்று கூறி வணங்கினான்.

காசி மன்னன் சென்றபிறகு தேவகிரி மன்னன், தன்னைவிட தன்னிடமிருந்து பொருள் உதவி பெறும் அய்யாசாமிக்கா புகழ் என்று மனம் புழுங்கியவாறே நாடு திரும்பினான். இனி அய்யாசாமிக்கு உதவக் கூடாது என்று முடிவெடுத்தான்.

அரசாங்க உதவி நின்ற பின்னும் அய்யாசாமி தம்பதி அன்னதானம் செய்வதை நிறுத்தவில்லை. மன்னனோ அய்யாசாமியின் பெயர் கெட

25 வருடங்களுக்கு முன் பிரசுரிக்கப்பட்ட கதை

வேண்டும் என்று தினமும் பலரை அவரது வீட்டிற்கு அனுப்பி வந்தான். இதனால் அய்யாசாமி தன் சொத்துக் களை விற்கும் நிலை ஏற்பட்டு முடிவில் எல்லாம் போய்விட்டன.

ஒருநாள் வீட்டில் ஒரு படி அரிசி மட்டுமே இருந்தது. அப்போது இரு பது பேர் சாப்பிட வந்தனர். கையில் பணமில்லாததால் அவரது மனைவி தன் தாலிக் கயிறில் மஞ்சளைக் கட்டிக் கொண்டு, தங்கத் தாலியை கண வனிடம் கொடுத்தாள். அவரும் அதை விற்று அன்றைய அன்ன தானத்தை நடத்தினார். இனியும் அவ் வூரில் அன்னதானம் செய்ய முடியா தென்பதால் அவர்கள் மறுநாளே காசிக்குப் புறப்பட்டனர்.

வழியில் அவர்கள் ஒரு சத்திரத்தில் இரவுப் பொழுதைக் கழிக்கத் தங்கிய போது, அங்கிருந்த மூன்று பயணிகள் ''இக்காலத்தில் வெளியூர் பயணி களுக்கு உணவு கிடைப்பதில்லை. எனவே தேவகிரி நாட்டிலுள்ள அன்ன தானம் அய்யாசாமியைக் கண்டு சில நாட்கள் அங்கே தங்கலாம். நீங்கள் அவரை அறிவீர்களா?'' என்று அய்யா சாமியிடமே கேட்டார்கள். அது கேட்ட அவர் சற்று யோசித்து, ''நீங் கள் தாராளமாகச் செல்லலாம். அவர் அங்கு தான் இருக்கிறார்,'' என்றார்.

அப்போது அவரது மனைவி, ''நாம் இப்போதே அவர்களுக்கு முன்பாக புறப்பட்டுச் சென்று, நம் வீட்டிலுள்ள உரலை விற்று அந்த பணத்தைக் கொண்டு இவர்களுக்கு உணவு அளிக்கலாம்,'' என்றாள்.

இருவரும் தம் ஊருக்கே திரும் பினர். அய்யாசாமி தம் வீட்டிலிருந்த கல்லுரலை சிரமப்பட்டு நகர்த்திய போது அங்கு தங்க நாணயங்கள் நிறைந்த ஒரு பித்தளைக் குடம் இருந்தது. அதுகண்டு அவர்கள் மிக வும் மகிழ்ந்தனர். பிறகு அம்மூன்று பயணிகளுக்கு மட்டுமின்றி எல்லோ ருக்குமே அன்னதானம் செய்ய லானார்கள். விவரம் அறிந்த மன்னன் தன் செய்கைக்காக வெட்கித் தலை குனிந்தார். உடனே அவன் மீண்டும் அய்யாசாமிக்கு அன்னதானம் செய் வதற்கான பொருள்களை தினமும் கொடுத்து உதவுமாறு கட்டளை பிறப்பித்தான்.




அம்புலிமாமாவின் அன்பளிப்பு
வீர தீர பராக்கிரமன் 21
ஓவியம் : பாணி
தாந்திரீகன் நாகபந்து பாசாங்கரன் என்ற விசித்திர உருவை உருவாக்கி ஆதித்தனைப் பிடித்துக் கொண்டு வரும்படிக் கட்டளை இட்டான். ஆனால் ஆதித்தனுக்கு கருட பகவானின் சக்திகவசம் போல இருந்ததால் பாசாங்கரனால் அவனை நெருங்க முடியவில்லை. அடியும் உதையும் பட்டு படுகாயம் அடைந்த பாசாங்கரன் குகைக் கோயிலில் போய் விழுந்து நாகபந்துவிடம் நடந்ததைக் கூறிவிட்டு மறைந்து போயிற்று. ஆதித்தனோ நாகபந்துவை அழிக்க மன்னனது ஆசிகளையும் மக்களின் ஆதரவையும் பெற்று சர்ப்பதேசத்திற்குப் புறப்பட்டான்.


சர்ப்ப தேசத்தை அடைந்ததும் ஆதித்தனின் வீரர்கள் கூடாரங்களை அமைக்க, சுற்றுப்புறம் எவ்வாறு உள்ளது என்று பார்க்க ஆதித்தன் தன் வீரர்களை அனுப்பினான்.
நரேந்திர தேவனும், ரவீந்திர தேவனும் தம் வீரர்களுடன் எங்கே இருக்கிறார்கள் என்று பார்த்து வாருங்கள். குகைக் கோயிலுக்குப் போகும் வழியையும் தெரிந்து கொள்ள வேண்டும்.


ஆதித்தன் கூடாரத்தில் இருக்கும் போது ஓர் அழுகைக் குரல் கேட்டது.
ஒரு பெண்ணின் குரல் போல உள்ளதே! யாராக இருக்கும்?
கூடாரத்திற்கு வெளியே சங்கிலியால் பிணைக்கப்பட்ட மலைவாசி தம்பதி களை ஆதித்தன் கண்டான்.


யார் அவர்கள்?
அவர்கள் சர்ப்பதேச மலைவாசிகள்.
சந்தேகப்படும் விதத்தில் அவர்கள் திரிந்து கொண்டு இருந்ததால் பிடித்து வந்தோம்.
உண்மையைக் கூறிவிடுங்கள். கூறினால்...


முதலில் நீங்கள் யார் என்பதைச் சொல்லுங்கள்.
...உங்களை எதுவும் செய்யாமல் விட்டுவிடுவோம்.
ஐயா! நான் மலைச்சாதி யினரின் தலைவரின் மகள். இந்த வாலிபரை மணக்க எண்ணியுள்ளேன்.


நாகபந்துவிடம் அகப்படுவதற்குமுன் நாங்கள் தப்பி ஓட முயன்றோம். அவ்வளவுதான். வேறு தப்பு எதுவும் செய்யவில்லை. தயவுசெய்து எங்களைக் காப்பாற்றுங்கள்.


ஐயா! என் பெயர் ஆதித்தன். நாகபந்துவும் அவனது சீடர்களும் வேறொரு ஆதித்தனைத் தேடிக் கொண்டு இருக்கிறார்கள். அவர் கிடைக்காத தால் என்னை அவர்கள் பிடிக்க முயன்றார்கள். நாங்கள் மிகவும் பயந்து...


உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ரகசிய சுரங்க வழியாக ஓடிவரும்போது இவர்கள் எங்களைப் பிடித்தார்கள்.


உன்னைப் பிடிக்க வந்தார்களா? ஏன்?
பலி கொடுக்கத்தான். நாகபந்து கொடுக்கும் அறுபதாவது பலி இவன். இவனை பலி கொடுத்தால் அவனுக்கு அற்புத சக்திகள் கிடைக்குமாம். இதை என் தந்தை கூறினார்.


ஆதித்தனின் கையில் கருட ரேகை உள்ளது. நாங்கள் நாகதேவதைகளை வழிபடுபவர்கள்.


நீ ஏதோ ரகசிய சுரங்கவழி என்றாயே. அது எங்கு ஆரம்பமாகி எங்கு போய் முடிகிறது?
அது குகைக் கோயிலில் அக்கினி குண்டத்தருகே ஆரம்பமாகி...


ஆலயக் குளத்தின் அருகே வந்து முடிகிறது. அந்த இடத்தில் தான் உங்கள் வீரர்கள் எங்களைப் பிடித்தார்கள்.


அப்படியா! இப்பொழுது நான் யாரென்று சொல்கிறேன். நாகபந்து தேடும் ஆதித்தன் நான்தான். நீங்கள் அவனைக் காண்பதற்கான வழியை எனக்குக் கூறுகிறீர்களா?


நீங்கள் தாம் ஆதித்தரா! உங்கள் சக்தி சாமர்த்தியங்களையும் பற்றி நரேந்திரதேவனின் வீரர்கள் கூறக் கேட்டு இருக்கிறோம்.
தொடரும்

# கேளிக்கை நேரம்

## தவளைக்கு உதவுங்கள்!

இந்தச் சிக்கலில் இருந்து எந்த வழியில் பாம்புகளிடம் அகப்படாமல் வெளியேறுவது என்று தவளை திணறுகிறது. நீங்கள் அதற்கு வழியைக் காட்டி வெளியே கொண்டுபோய் விட்டுவிடுங்களேன்!







## ராஹுலின் நிழல்

ராஹுல் தவழ்ந்து கொண்டிருக்கிறான். இந்த மூன்று நிழல்களில் எது தன்னுடையது என்று அவனுக்குத் தெரியவில்லை. நீங்கள் அவனுடைய சரியான நிழலை கண்டுபிடியுங்கள்!



## காண முடியாத காட்சிகள்

ஒரு காட்டில் பல மிருகங்கள் உள்ளதை இப்படம் காட்டுகிறது. இதில் என்னென்ன தவறுகள் உள்ளன என்று கண்டுபிடித்துக் கூறுங்கள் பார்ப்போம்!

*(விடைகள் 66ம் பக்கத்தில்)*

## கண்டுபிடியுங்கள்!

இந்த இரு படங்களும் பார்ப்பதற்கு ஒன்றுபோல இருந்தாலும் எட்டு வித்தியாசங்கள் உள்ளன. அவை யாவை?








# போட்டோ வாக்கியப் போட்டி







**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/- போட்டி முடிவு பிப்ரவரி 2003 இதழில் வெளியிடப்படும்.

**போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.**

## வாழ்த்துக்கள்!

அக்டோபர் 2002 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :

**டி.கே. சுப்பிரமணியன்**
*81, சன்னதித் தெரு,*
*திருப்பரங்குன்றம் - 625 005.*

பரிசு பெற்ற வாக்கியங்கள்





ஒளி சிந்தும் முகம்
வழிபடும் கரம்

கேளிக்கை நேரம் விடைகள் (பக்கம் 64-65)

**கண்டுபிடியுங்கள் !**

1. அம்புகளின் எண்ணிக்கை
2. குறியிலுள்ள வட்டங்கள்
3. ஆடையிலுள்ள புள்ளிகள்
4. பின்புறமுள்ள மலைகள்
5. பறவையின் தலையில் இறகுகளின் எண்ணிக்கை
6. சிறுவனின் தலைக்கட்டில் உள்ள புள்ளிகள்
7. பறவையின் இறக்கை அமைப்பு
8. பறவையின் வியர்வைத் துளி

ராஹுலின் நிழல் - 3

**காண முடியாத காட்சிகள்**

கிளி மரத்தைக் கொத்துவது, பகலில் தென்படும் வௌவால், புலி புல் தின்பது, முயலின் வால், முயல் மாமிசம் உண்பது, கங்காருவின் மடியில் நாய்க் குட்டி, கங்காருவின் தலையில் கொம்புகள்

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam

